ஸ்ரீ

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

ப்ரபந்ந ஜநகூடஸ்தரான நம்மாழ்வார் அருளிச்செய்த
திருவாய்மொழிக்கு வ்யாக்யானங்களான
ஒன்பதினாயிரப்படி, இருபத்துநாலாயிரப்படி, ஈடுமுப்பத்தாறாயிரப்படிகளைக் கொண்ட

# பகவத் விஷயம்

## ஏழு, எட்டு பத்துக்கள்

---

ஸ்ரீகாஞ்சி ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர் ஸ்வாமி பதிப்பு

---

அச்சுத்தாள் திருத்தினவர்கள்:
திருமலை அனந்தாண்பிள்ளை, குன்றபாக்கம், ந்யாய வேதாந்த வித்வச்சிரோமணி
கிருஷ்ணமாசாரியர், திருப்பதி.
M. A. வேங்கடகிருஷ்ணன், திருவல்லிக்கேணி.

கிடைக்குமிடங்கள்:
தி. அ. அங்காரக்கனி அனந்தாழ்வான், காஞ்சிபுரம்-3
M. A. வேங்கட கிருஷ்ணன், 20, தெற்குமாட வீதி, திருவல்லிக்கேணி.
V. N. தேவநாதன், 213, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை-1.
திருவல்லிக்கேணி குரு அச்சகத்தில் அச்சிடப்பட்டது.

ராக்ஷஸ ஸ்ரீ தைத் திருமூல வெளியீடு



1976

ஸ்ரீ:
ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# திருவாய்மொழி

## எட்டாம் பத்து

### முதல் திருவாய்மொழி—தேவிமார் : ப்ரவேசம்.

### நஞ்சீயர் அருளிச்செய்த ஒன்பதினாயிரப்படி வ்யாக்யானம்.

எட்டாம்பத்தில், முதல்திருவாய்மொழியில், பெரிய பிராட்டியார் தொடக்கமான மஹிஷிகளோடும் தனக்கு நித்யபரிசாரகரான அயர்வறுமமரர்களோடுங்கூடின நித்யவிபூதியுக்தனாய், என்றும் தனக்கு ரக்ஷ்யமான ஜகத்விபூதியையு முடையனாய்த் தன்விபூதியிலுள்ளாரெல்லார்க்கும் எல்லாப்படியாலும் ரக்ஷகனுமாய், இப்படிகளாலே அத்யந்தம் விலக்ஷணனுமாய், பிரிந்தார்க்கு தரிக்கவொண்ணாதபடி ஸௌந்தர்ய ஔதார்யாதிகளாலே நிரதிசய போக்யனுமாயிருந்துள்ள எம்பெருமானைத் திருவாறன் விளையிலேகண்டு அடிமைசெய்யவேணுமென்று ஆசைப்பட்டு, அப்போதே தம்அபேக்ஷிதம் பெறுமையாலே மிகவும்நோவுபட்டு, தமக்குப்பிறந்த தசாவிபாகத்தாலே, அவன் ஆச்ரிதர்க்கு அத்யந்தபவ்யனென்றும் எல்லார்க்கும்ஈச்வரனாய் ரக்ஷகனுமிருப்பானொருவனென்றும்இருக்கிற தமக்கு உஜ்ஜீவநஹேதுவான இந்த ஜ்ஞாநங்கள் பொய்யோவென்று சங்கித்து, அத்தால் மிகவும் அவஸந்நரான ஆழ்வாரை எம்பெருமான், "உம்மை சப்தாதிவிஷயப்ராவண்யத்தைத் தவிர்த்து இப்படி நம்மாலல்லது செல்லாதபடி பண்ணினோம்; இனி உமக்குச் செய்யாததுஉண்டோ?" என்ன, அத்தையநுஸந்தித்து அதிசங்கையுந் தவிர்ந்து தரித்து முடிக்கிறார்.

### பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த இருபத்துநாலாயிரப்படி

எட்டாம்பத்தில், முதல்திருவாய்மொழியில், ஸர்வேச்வரன், பர்யங்க வித்யையிற் சொல்லுகிற படியே திருவநந்தாழ்வான்மேலே யிருக்குமாபோலே, நாய்ச்சிமாரோடும், நித்யபரிசாரகராய்த் தனக்கு அஸாதாரணராயிருக்கும் பரிகரத்தோடுங்கூடத் திருவாறன்விளையிலே திருவாய்மொழி கேட்கைக்காக வந்திருந்தான், அங்கேசென்று திருவாய்மொழிபாடிஅநுகூலவ்ருத்திகளையும்பண்ணி 'அநுபவிப்போம்' என்று பாரித்தார்; அது மநோரதமாத்ரமேயாய், கால்நடையாடாதபடியான பலஹாநியாலே அங்கேபோய் அதுசெய்து தலைக்கட்டப்பெற்றிலர். புருஷகாரபூதைகளான நாய்ச்சிமாரும் நித்யஸூரிகளுமுண்டாயிருக்க, ஸர்வாபேக்ஷிதங்களையும் கொடுக்கைக்கு உண்டான ஐச்வர்யம் உண்டாயிருக்க, ஆச்ரிதார்த்தமாக நினைத்தவிடங்களிலே உதவுகைக்கு உண்டான நிரதிசயபோக்யமான விக்ரஹங்களும் உண்டாயிருக்க, இத்தலையில் ஆசையும் குறைவற்றிருக்க, நமக்கு இழக்கவருவதே! என்று இன்னாதானவர், தமக்கு உஜ்ஜீவநஹேதுவாய், ஈச்வரனுக்கு நியதமாயிருக்கிற ஆச்ரிதபவ்யதையென்ன! அந்தர்யாமியாய்ப் புக்குநின்று ஸத்தையைநோக்கி ஸர்வாபேக்ஷிதப்ரதத்வத்தால்வந்த ஸர்வரக்ஷகத்வமென்ன! இந்த குணங்கள் நம்மைத்தோற்றிப் பொய்யாகிறதோ? என்று அக்குணங்களிலே அதிசங்கை பண்ணினார். குணஜ்ஞாநத்தால் ஜீவித்திருக்குமவர்க்குக் குணத்திலே அதிசங்கைபிறந்தால், தத்விஷயஜ்ஞாநமும் பொய்யாகையாலே, ஜீவிக்கவிரகில்லையிறே. "க்யாத: ப்ராஜ்ஞ: க்ருதஜ்ஞச்ச ஸாநுக்ரோசச்ச ராகவ:,

ஸத்வ்ருத்தோ நிரநுக்ரோச:சங்கே மந்தபாக்யஸங்க்ஷயாத்'' இத்யாதி. ஈச்வரன், இப்படி இவர்க்குப் பிறந்த அவஸாதத்தைப் பார்த்தருளி, நாம் உமக்கு ஒன்றும் செய்திலோமென்றிருந்தீரோ? புறம்புள்ள வற்றில் துவக்கையறுத்தோம்: இப்படி நம்மாலல்லது செல்லாதபடி பண்ணினோம்; மேலுள்ளசேஷமும் நாமே தருவதாக இருந்தோம்; நீர் இங்ஙன் கூப்பிடுகிறதென்?'' என்று, இவர் தம்இழவெல்லாம்மறக்கும்படி விஸ்ரம்பணீயத்வப்ரமுகமான குணங்களைக் காட்டிக்கொடுக்கக்கண்டு அத்தையநுஸந்தித்து, அதில் அதிசங்கையுந் தீர்ந்து தரித்து இனியராகிறார்.

## நம்பிள்ளை திருவாய்மலர்ந்தருளி
## வடக்குத்திருவீதிப்பிள்ளை பட்டோலை கொண்டருளின
## ஈடு முப்பத்தாறாயிரப்படி.

பிராட்டிமாரோடே நித்யபரிகரம் ஸேவிக்க, பர்யங்கவித்யையிற் சொல்லுகிற படியே திருவநந்தாழ்வான்மேலே ஸர்வேச்வரன், நாம் பாடின திருவாய்மொழி கேட்கைக் காகத் திருவாறன்விளையிலே எழுந்தருளியிருந்தான்: நாம் அங்கேபோய்த் திருவாய்மொழி கேட் பித்து அநுகூல வ்ருத்திகளையும் பண்ணி அநுபவிப்போமென்று பாரித்தார்: அது மநோரத மாத்ரமாய் நினைத்தபடி தலைக்கட்டப் பெற்றதில்லை. 'பிராட்டிமார் அருகே எழுந்தருளியிருக்க, நித்ய ஸூரிகளுண்டாயிருக்க, நினைத்தபடி கார்யஞ்செய்து தலைக்கட்டுக்கைக்கீடான ஐச்வர்யம் குறைவற்றிருக்க, ஆச்ரிதர் உகந்தவற்றைத் தனக்குத் திருமேனியாகக்கொண்டு உதவும் ஸ்வபா வனுமிருக்க, எனக்கு ருசியிற் குறைவற்றிருக்க, நினைத்தபரிமாற்றம் பெறுதொழிவோமே!' என்று வெறுத்தார். இவர்தாம் ஸர்வேச்வரன்பக்கல் தமக்குத் தஞ்சமாக நினைத்திருப்பது இரண்டு ஸ்வபாவத்தை :— ஆச்ரித பரதந்த்ரனாயிருக்குமிருப்பையும், ஸ்வவ்யதிரிக்த ஸமஸ்த வஸ்துக்களும் தனக்கு ப்ரகாரமாகத் தான் ப்ரகாரியாய் இவற்றுக்கு வந்த வ்யஸநம் தனக்கு வந்ததாக நினைத்திருக்கும் ப்ராப்தியையுமாயிற்று; அவையிரண்டும் தம்பக்கல் கார்யகரமாகக் கண்டிலர்; ''நாமொருவன் தோற்றி ஸர்வேச்வரனுக்கு இவையும் பொய்யாகப் புகுகிறதோ?'' என்று அதிசங்கை பண்ணினார். ''குணஜ்ஞானத்தாலே ஜீவிக்குமவர் குணங்களிலே அதி சங்கை பண்ணினால் ஜீவிக்கமாட்டாரே. இவர்தம்மை நாம் இழக்கவொண்ணாது. இவரை ஸமாதாநம் பண்ணும் விரகு ஏதோ?'' என்று பார்த்து, ''வாரீர்! நீர், கண்டதெல்லாவற்றிலும் அதிசங்கை பண்ணுகிறதென்? நாம் உமக்கொன்றும் செய்திலோமோ? இவ்வளவாக உப கரித்த நாம் மேலுள்ளதுஞ் செய்வோங்காணும்; நீர் இங்ஙனே அதிசங்கை பண்ணவேண்டா;' என்று தன்னுடைய விஸ்ரம்பணீயத்வப்ரமுகமான கல்யாண குணங்களையும், தான் இவ்வள வாகப் பண்ணின உபகாரங்களையுங் காட்டி, இவருடைய அதிசங்கையைத் தீர்த்து ஸமா தாநம்பண்ண ஸமாஹிதராய், அத்தையநுஸந்தித்து இனியராகிறார்.

*க்யாத இத்யாதி* *ப்ராஜ்ஞ:* - தம்மாலே யபிமதம் பெறவிருப்பார் அறிவிற்குறையால் இழக்க வேண்டாதபடி தம்மளவையும் அவர்களளவையும் அறிகைக்கு ஈடான அறிவுடை யவர். *க்ருதஜ்ஞச்ச* - கிட்டுமவன் தன்பக்கல் வைமுக்யம் பண்ணுமது தவிர்ந்து ஓரடி வர நின்ற எல்லையும் அறிவர். *ஸாநுக்ரோசச்ச* - அறிவுகொண்டு கார்யங்கொள்ளவும் அறியாதே யிருக்குமவர்களுக்கு, அவர்களிழவை யநுஸந்தித்து ''ஐயோ!'' என்று இரங்குமவராயிருப்பர். *ராகவ:* - இது இவர்தம்மைத் தோற்றி வந்ததல்ல; குடிப்பிறப்பாலே. *ஸத்வ்ருத்த:* பரஸம் ருத்த்யேக ப்ரயோஜநராயிருப்பர். *க்யாத:* இப்படி எதிரிகள்கோஷ்டியிலும் ப்ரஸித்தர். *நிரநுக்ரோச:சங்கே* - இக்குணங்களையுடைய பெருமாளை இத்தசையில் எனக்கு முகங்காட்டக் காணாமையாலே, இக்குணங்களொன்றுமில்லாத ந்ருசம்ஸரோபாதியாக சங்கியாநின்றேன். அவர்க்கு இக்குணங்கள் உண்டாகாதொழியாதிறே. *மந்தபாக்யஸங்க்ஷயாத்* என்னுடைய பாக்யஹாநியாலேயாமித்தனையிறே. ''அறிவொன்றும் சங்கிப்பன் வினையேன்'' என்கிறாரிறே இவரும். இத்திருவாய்மொழிக்கு ஆளவந்தாரருளிச்செய்யும் ச்லோகம், இது.

தேவிமாராவார்திருமகள்பூமி ஏவமற்றமரராட்செய்வார்*
மேவியவுலகம்மூன்றவையாட்சி வேண்டுவேண்டுருவம்நின்னுருவம்*
பாவியேன்றன்னையடுகின்றகமலக்கண்ணது ஓர்பவளவாய்மணியே!* (1)
ஆவியே! அமுதே! அலைகடல்கடைந்தவப்பனே! காணுமாறருளாய்.

ஒ.—முதற்பாட்டில், பிரிவில் தரிக்கவொண்ணாதபடி நிரதிசயபோக்யனான நீ, உன்னை நான் காணும்படி க்ருபைபண்ணியருளவேணுமென்கிறார். [ஏவவென்று தொடங்கி] - மற்று ஏவ அடிமை செய்யக்கடவார் - அயர்வறு மமரர்கள்; உன்னுடைய ஆஜ்ஞாநுபாலநம் பண்ணக்கடவதான பத்தரும், முக்தரும் நித்யருமான த்ரிவிதசேதநரும் ஆளக்கடவ விபூதி; உனக்கு விபூதியென்றால் தகுதியான மூன்றுலோகமென்றுமாம். [வேண்டுவேண்டுருவம் நின்னுருவம்] - ஆச்ரிதரக்ஷணத்துக்கு வேண்டின வேண்டின வடிவு உன்வடிவு. [பாவியேனென்று மேலுக்கெல்லாம்] - இங்ஙனே ஸுலபனான உன்னை இழக்கைக்கிடான பாபத்தைப்பண்ணின என்னை நோவுபடுத்தாநின்றுள்ள அழகிய திருக்கண்களையும் விலக்ஷணமான திருப்பவளத்தையும் உடையையாய், ஒருகாலும் விடவொண்ணாதபேரழகையுமுடையை யாய், எனக்கு தாரகனான ப்ராணனுமாய், நிரதிசயபோக்யனுமாய், அபேக்ஷித்தார் அபேக்ஷிதங்களைக் கடலைக்கடைந்தாகிலும் கொடுக்கும் உபகாரகனுமானவனே!

இ.—முதற்பாட்டில், பிரிவில் தரிக்கவொண்ணாதபடி நிரதிசயபோக்யனான நீ, உன்னை நான் காணும்படி க்ருபைபண்ணியருளவேணுமென்கிறார். [தேவிமாராவார் திருமகள்பூமி] - அவர்கள் புருஷம் பண்ணப் பெறுகையாலே இவர்களுக்கு உண்டாம்; ‘ரமமாணா வநேத்ரய:’’ ஸ்வரூபாநுரூபமாயிறே ஆண்டாளும்: ‘‘ந கச்சிந் நாபராத்யதி’’ என்று பொறைக்கு உவாத்தாயிருக்கும் ஒருத்தி; ‘‘பொறுப்ப நெளிந்தவிடத்தே உனக்குக் கார்யஞ்செய்யவேண்டும்படி வல்லபைகளாயிருக்கிறார் பிராட்டியும் தெத்தை? குற்றந்தானுண்டோ?’’ என்று அப்பொறைதான் ஒருவடிவு கொண்டாற்போலேயிருக்கும் ஒருத்தி; ஒருத்திஸம்பத்தாயிருக்கும், ஒருத்திஸம்பத்துக்கு விளைபூமியாயிருக்கும்; அவர்கள் அருகே யிருக்க எனக்கு இழக்கவேண்டுகிறதென்? என்கை. [ஏவ இத்யாதி] - அவனும் அவர்களுமான சேர்த்தி யிலே யெடுத்துக் கை நீட்டுவார் நித்யஸூரிகள். [ஏவ] - கைங்கர்யந்தான் உத்தேச்யமானவோபாதி, ஏவிக்கொள்கையும் உத்தேச்யமென்கை: ‘‘க்ரியதாமிதி மாம்வத’’. மற்றென்று - துல்யவிகல்பத்தையா யிற்று. திருமுலைத்தடத்திலே அணைத்தால் பிராட்டிமார்க்கு உள்ள இனிமை, அச்சேர்த்தியிலே கைங்கர்யம் ஸுகங்களிருப்பது: ‘‘வேதம் வல்லார்களைக்கொண்டு’’ என்கிறபடியே, அவர்களும், புருஷகாரபூதராயிறே யிருப்பது. [மேவிய இத்யாதி] - புருஷகாரம் உண்டானாலும் அபேக்ஷிதம் கொடுக்கைக்கிடான ஐச்வர்யம் வேணுமிறே. [மேவியவுலகம்] - தகுதியாய்ப் பொருந்தினவுலகமென்னுதல், ஆஜ்ஞாபரிபாலநம் பண்ணுமென்னுதல், [மூன்றவையாட்சி] - பத்தரும், முக்தரும், நித்யஸித்தருமென்னுதல். மேலுங்கீழும் நடுவுமான சதுர்த்தசபுவநமென்னுதல். [வேண்டுவேண்டுருவம் நின்னுருவம்] - ரக்ஷணத்துக்கு வேண்டினவேண்டின வடிவென்னுதல்; இச்சாக்ருஹீதமான வடிவென்னுதல்; ஆச்ரிதர் உகந்தவடி வென்னுதல் [பாவியேன்தன்னை] - புருஷகாரமும் உண்டாய், விபூதியையும் உடையனாய், ஆச்ரிதாதீந மான விக்ரஹயோகத்தையு முடையனாயிருக்க, இழக்கைக்குஅடியான பாபத்தைப் பண்ணின என்னை. அந்த கார்ஹஸ்த்யத்துக்குப் புறம்பானேனேயென்கிறார். [அடுகின்ற] முடிகின்ற. ‘‘உயிர்க்கெல்லாம் தாயாயளிக்கின்ற தண்டமலரக்கண்ணன்’’ என்கிற திருக்கண்களையுடையவனே! [பவளவாய்] - ‘‘ஸவிலாஸஸ்மிதாதாரம் பிப்ராணம் முகபங்கஜம்’’ என்கிற ஸ்மிதத்தையுடையவனே! [மணியே] - விடாயர்முகத்தே குளிர்ந்தநீர்வெள்ளத்தை வெட்டி விட்டாப்போல ச்ரமஹரமான வடிவையுடையவனே! இவைகிடீர் எனக்கு பாதகமாய் நடக்கிறது! [ஆவியே] ஒரு வாயுவிசேஷமன்று இவர்க்குப்ராணன்: நாய்ச்சிமாரோடும், விபூதியோடும், திவ்யவிக்ரஹத்தோடுங்கூடின ஸர்வாதிகவஸ்துவாயிற்று இவர்க்கு ப்ராணன். [அமுதே] தாரகமாத்ரமாயிருக்கையன்றிக்கே, நிரதிசய போக்யபூதனானவனே! [அலைகடல் கடைந்த அப்பனே] - நிரதிசயபோக்யனாயிருந்த உன்னை அநாதரித்து, புறம்பே ஓர்உப்புச்சாறு அமையு மென்றிருப்பார்க்கு, உடம்பு நோவக் கடலைக்கடைந்துகொடுக்கும் உபகாரகனே! [காணுமாறருளாய்] - எனக்குக கடலகடையவேண்டா, வடிவைக்காட்டவமையும். இவர்க்கு ப்ராப்யம அமருதமன்று; காண்கை. உபாயமும் கடல்கடைகையன்று; அதுவே ‘‘ப்ராப்யப்ராபகமிரண்டும் ஒன்றே’’ என்று இருப்பார்க்குக் கார்யம் செய்யலாகாதோ? என்கை.

ஈடு.—முதற்பாட்டு. பிரிவில் தரிக்கவொண்ணாதபடி நிரதிசயபோக்யனான நீ, உன்னை நான் காணும்படி க்ருபை பண்ணியருளவேணு மென்கிறார்.

[தேவிமார் இத்யாதி] - [*நகச்சிந்நாபராத்யதி*] என்பாரும் அருகேயிருக்க, எனக்கு க்லேசப்படவேண்டுகிறதேறதுவென்? [*மித்ரமௌபயிகம்*] ராவணன், பிராட்டி திருமுன்பே நின்று சிலவற்றை ஜல்பிக்கப்புக்கவாறே, ப்ரஜைநலிந்ததென்னுத் தாய் சீறுமிறே! ஜநநியான முறையாலே, அவள் அனர்த்தங்கண்டு ஹிதமருளிச் செய்கிறாள். 'அவர் திருவடிகளிலே சரணம்புகு'' என்றால், அவன் தாழ்வாக நினைத்து இசையானென்னுமத்தாலே - 'தோழமை கொள்' என்கிறாள்: அவர் *மித்ரபாவேந* என்பர்; இவன் *மித்ரமௌபயிகம்* என்னும். அவ்வருகு போனாலும் பரமஸாம்யாபத்தியிறே கொடுப்பது. எனக்கு சத்ருவாயிருப்பாரோடு உறவு பண்ணவேண்டுகிறதென்? என்னுமே! *ஸ்த்தாநம் பரீப்ஸதா* கொடுவாய். வழி பறிப்பார்க்கு கரையிலே கால்பாவி நின்று கொள்ளவேணுமே: உன் குடியிருப்பை ஆசைப்பட்டாயாகில் இத்தனையுஞ் செய்யவேணும், 'எனக்கு ஒரு குடியிருப்பும் வேணுமோ? ஆகாச சாரிகளாயன்றோ இருப்பது நாங்கள்' என்று அவனுக்கு நினைவாக, *வதம் சாநிச்சதா* - அவர் அம்புகள் ஆகாசத்திலே நடவாதோ? [*கோரம்*] உன்னைச் சிங்கவிளக்கெரித்துக் கொல்லாதே நற்கொலையாகக் கொல்லும்போதும் அவரைப் பற்றவேணுங்காண். *த்வயா* பலசொல்லியென்? உனக்கு அவர் வேணும். *அஸௌ* - அவர்படி உனக்குத் தோற்றுகிறதில்லையோ? உருவு வெளிப்பாட்டாலே முன்னிலை இவளுக்கு: அச்சத்தாலே முன்னிலையாகத்தோற்றும் அவனுக்கு. 'நீ ரக்கழிய அபராதம் பண்ணி நிற்கிற என்னைக் கைக்கொள்ளுவரோ என்ன *புருஷர்ஷப:* நீ செய்தவற்றை ஒன்றாக நினைத்திருப்பாரொருவரல்லர், புருஷோத்தமர் காண். [தேவிமாராவார் திருமகள் பூமி] - அவர்கள் புருவம் நெளிந்தவிடத்தே உனக்குக்காரியஞ் செய்யவேண்டும்படி வல்லபைகளாயிருக்கிற பெரிய பிராட்டியாரும் ஆண்டாளாரும். *நகச்சிந்நாபராத்யதி* என்று பொறைக்கு உவாத்தாயிருக்கும் ஒருத்தி, பொறுப்பது எத்தை? குற்றந்தானுண்டோ?' என்று அந்தப்பொறை விளையும் பூமியாயிருக்கும் ஒருத்தி: அவர்கள் அங்கேயிருக்க எனக்கு இழக்கவேண்டுகிறதென்? [ஏவ] - கைங்கர்யந்தான் உத்தேச்யமானவோபாதி ஏவிக்கொள்ளுகையும் உத்தேச்யமென்கை: *க்ரியதாமிதி மாம்வத* மின்னி முழங்கி வில்லிட்டு வர்ஷிக்கும் மேகத்வநிபோலே கம்பீரமாயிறே திருமிடற்றோசைதானிருப்பது. [மற்றமரராட் செய்வார்] - இச்சேர்த்தியில் கிட்டி நின்று அடிமை செய்வார் நித்யஸூரிகள். மற்றென்பது - துல்யவிகல்பத்தையாயிற்று. திருமுலைத் தடத்திலே அணைந்தால் பிராட்டிமார்க்குண்டான இனிமை இச்சேர்த்தியிலே கைங்கர்யம் பண்ணப்பெறுகையாலே இவர்களுக்கும் உண்டாம்; *ரமமாணா வநே த்ரய:* என்கிறபடியே, ஸ்வரூபாநுரூபமாயிறே ஸுகங்களிருப்பது. பெருமாளுக்கும் பிராட்டிக்கும் அந்யோந்ய ஸம்ச்லேஷத்தால் பிறக்கும் ரஸம் இருவருமான சேர்த்தியைக் காண்கையாலே பிறக்கும் இளையபெருமாளுக்கு. [அமரராட்செய்வார்] - "வேதம் வல்லார்களைக் கொண்டு" என்கிறபடியே அவர்களும் புருஷகாரபூதராயிறேயிருப்பது. பிராட்டிமாரும் அருகேயுண்டாய், "மற்று" என்று அவர்களோடொக்க விகல்பித்துச் சொல்லலாம்படியான நித்யஸூரிகளு முண்டானாலும் ஐச்வர்யத்திலே குறையுண்டாகில் கார்யஞ் செய்யவொண்ணாதிறேயென்னில்,—[மேவிய இத்யாதி] - கீழும் மேலும் நடுவுமான லோகங்களைச் சொல்லுதல், த்ரிவித சேதநரையுஞ் சொல்லுதல். [மேவிய] - லோகத்துக்கு இவன் ரக்ஷகனென்றால் தகும்படியிருக்குமென்னுதல், ராஜ்யந்தான் பொருந்தியிருக்குமென்னுதல். *த்ரைலோக்யமபி நாதோ யேந ஸ்யாந்நாதவத்தரம்* த்ரைலோக்யத்தையும் கையடைப்பாக்கினாலும், ரக்ஷ்யம் சுருங்கி ரக்ஷகத்வப்பாரிப்பே விஞ்சியிருக்கும். [வேண்டு வேண்டுருவம் நின்னுருவம்]-அவ்வோ ரக்ஷணத்துக்குவேண்டின வேண்டின வென்னுதல்; இச்சாக்ருஹீதமென்னுதல்; ஆச்ரிதர் உகந்தவற்றையே தனக்குத் திருமேனியாகக் கொள்ளுமென்னுதல். [பாவியேன் தன்னை] - புருஷகாரமுமுண்டாய் விபூதியையுமுடையனாய், ஆச்ரிதார்த்தமான விக்ரஹத்தையுமுடையனாயிருக்க, இழக்கைக்கடியான பாபத்தைப் பண்ணின என்னை, அந்த கார்ஹஸ்த்யத்துக்குப் புறம்பாவேனே! என்கிறார். [அடுகின்ற]- முடிகின்ற. உயிர்க்கெல்லாம் தாயாயளிக்கின்ற தண்டாமரைக் கண்ணையுடையவனே! [பவளவாய்] - *ஸவிலாஸஸ்மிதாதாரம் பிப்ராணம் முகபங்கஜம்* என்கிற ஸ்மிதத்தை

யுடையவனே! [மணியே] - விடாயர்முகத்தே குளிர்நீர்வெள்ளத்தை வெட்டிவிட்டாப்போலே ச்ரமஹரமான வடிவையுடையவனே! இவை கிடீர் எனக்கு பாதகமாகிறது; [ஆவியே] - ஒரு வாயு விசேஷமன்று இவர்க்கு ப்ராணன்; நாய்ச்சிமாரோடும் நித்யஸூரிகளோடுங் கூடிக் கண்ணும் வாயும் வடிவுமாயாயிற்று இவருடைய ஆவியிருப்பது. [அமுதே] - தாரகமான ப்ராணனும் போக்யவஸ்துவைப் புறம்புதேடவேண்டாதே போக்யமும் தானேயாயிருக்கை. போக்யமும் தானானால் ஸாதித்துக்கொள்வார் இவரன்றிக்கே உபாயமும் தானேயாயிருக்கை. [அலைகடல் கடைந்தவப்பனே] - ப்ரயோஜநாந்தரபரர்க்கும் அரியன செய்து அபேக்ஷிதங்களைச் செய்யும் உபகாரகனே! உமக்குச் செய்யவேண்டுவதென்? என்ன, [காணுமாறருளாய்] - எனக்குக் கடல் கடைய வேண்டா, அவ்வடிவைக் காட்ட அமையும். வடிவைக்காண்கை - ப்ராப்யம், அருள் - ப்ராபகம். "ப்ராப்ய ப்ராபகங்கள் நீயே" என்றிருப்பார்கார்யம் செய்ய லாகாதோ?

**காணுமாறருளாயென்றென்றேகலங்கிக் கண்ணநீரலமர* வினையேன்**
**பேணுமாறெல்லாம்பேணி நின்பெயரேபிதற்றுமாறருளெனக்கந்தோ!***
**காணுமாறருளாய்காகுத்தா!கண்ணா! தொண்டனேன்கற்பகக்கனியே!***
**பேணுவாரமுதே!பெரியதண்புனல்சூழ் பெருநிலமெடுத்தபேராளா! (2)**

ஒ.—இரண்டாம்பாட்டில், "என்றுங்காணவேணும்" என்று மிகவும் நோவுபட்டிருக்குமிருப்போ என்திறத்துச்செய்தருளப்பார்த்தருளிற்று? ஐயோ! இங்ஙனேபடாமே உன்னைக்காணும்படி க்ருபைபண்ணி யருளவேணும்! என்கிறார். [காணுமாறென்று தொடங்கி] - காணுமாறு அருளாய் என்று நிரந்தரமாகச் சொல்லாநின்றுகொண்டு அந்த தாருணத்வநிவழியே ஹ்ருதயம் கலங்கிக் கலங்கினஹ்ருதயத்துக்குப் போக்குவிட்டாப்போலே மிகவும் கண்ணநீர்வரும்படி உன்னைக்காணாதே இப்படி துःக்கப்படுகைக்கீடான பாபத்தைப்பண்ணினநான் தேடும்படியெல்லாம் தேடி உன்னைப்பெறுதல்வ்யஸநத்தாலே உன்னுடைய திருநாமங்களைப் பிதற்றும்படியான இதுவோ நீஎனக்குப்பண்ணும் க்ருபை? [காகுத்தாவென்று தொடங்கி]-அர்த்திகளுடைய ஸர்வாபேக்ஷிதமும் கிடைக்கும் ககுத்ஸ்த்தகுலத்திலே வந்துபிறந்தருளி, அதுக்குமேலே அங்குப்பெறுதனவும் பெறலாம்படி க்ருஷ்ணனுய்வந்து திருவவதாரம்பண்ணி சுலபனான எனக்கு அயத்நலப்தபோக்யனானவனே! [பேணுவாரென்று தொடங்கி] - உன்னையாசைப்பட்டார்க்கு நிரதிசயபோக்யனும், உன்னையாசைப்படுதல் தன்ஆபத்தை உனக்கறிவித்தல் செய்யமாட்டாதேயிருந்த ஜகத்தை ப்ரளயார்ணவத்தினின்றும் வெறும் உன்க்ருபையாலே எடுத்தபெரியோனே!

இ.—இரண்டாம்பாட்டில், "காணவேணும் என்று மிகவும் நோவுபட்டிருக்குமிருப்பேயோ என் திறத்தில் செய்யப்பார்த்தது? நான் இங்ஙனேபடாமே உன்னைக்காணும்படி க்ருபைபண்ணியருள வேணும்" என்கிறார். [காணுமாறருளாய்] "அலைகடல்கடைந்த அப்பனே! காணுமாறருளாய்" என்னச் செய்தே காணப்பெறுதேயிருக்க, பின்னையும் "காணுமாறருளாய்" என்கிறாரிறே. காண்கைக்கு ஒரு ப்ரவ்ருத்தி பண்ணுமவரல்லரே. வர்ஷதாரையாலல்லது தரியாத சாதகம்போலே அருளல்லது அறியாதவர் ப்ரவர்த்திக்கைக்குத் தாம் சக்தரானாலும், ப்ராப்தியில்லை என்றிருக்குமவர். [என்றென்றே] - அநவரதம் இத்தையே சொல்லாநிற்பர். ஒருகால்சொன்னால் வரக்காணுதொழிந்தால், வேறொரு புகலுண்டாகிலிறே அத்தைப் பற்றலாவது? [கலங்கி] - இப்படி கூப்பிட்டு ஒருபடிப்படச் சொல்லா நின்ற வந்த தாருணத்வநி வழியே ஹ்ருதயத்திலேபிறந்த கலக்கம் ஒருகாலைக்கொருகால் ஏறிவாராநின்றது. "ஜடிலம் சீரவஸநம்". [கண்ணநீரலமர] - அகவாயிற் கலக்கம் உள்ளடங்காமை கண்ணநீராய்ப் ப்ரவஹியாநின்றது. [வினையேன்] - இதுக்குமுன்பு அவ்விஷயத்தைப்பற்றினார்க்குக் கலக்கமும் கண்ணநீருமில்லைகிடீர்; ஆசாலேசமுடையார்காற்கடையிலே துவளக்கடவ தத்த்வத்தைப்பெறுகைக்கு நான் இங்ஙனே கூப்பிடும் படியான பாபத்தைப் பண்ணினேன். [பேணுமாறெல்லாம் பேணி] - முதலிலே அபேக்ஷையொன்று அகன்று, "அவன்விரும்பாத நானும் என்னுடைமையும் எனக்கு வேண்டா" என்று ஆத்துமையாலே

மடலெடுக்கைவைத்து, பலபடியும் ப்ரபத்திபண்ணி, ப்ரணயரோஷம் தலையெடுத்துக் கிலாய்ப்பதும் செய்த
விடத்திலும். [நின்பெயரே பிதற்றுமாறருள் எனக்கு] - எனக்கருள் உன்பெயரே பிதற்றுமாறாய்விட்டது.
உன்னைப்பெறாத வ்யஸநத்தாலே உன்னுடைய திருநாமங்களை அக்ரமமாகச்சொல்லிக் கூப்பிடும் இதுவோ
நீ எனக்குப்பண்ணும் க்ருபை? நீசவிஷயங்களை ஆசைப்பட்டுக் கூப்பிடுமத்தைத் தவிர்த்து, நம்மை
யொழியச் செல்லாமையினைத்து, நம்மைப் பேர்சொல்லிக் கூப்பிடும்படி பண்ணினோமேயென்றன்றோ
இருக்கிறது? ஸம்ஸாரிகளிற்காட்டில் வ்யாவ்ருத்தியோ எனக்கு வேண்டுவது? என் அபிமதம் பெற
வேண்டாவோ? [அந்தோ] - உன்னை நீ பிரிந்தறியாய்; பிரிந்தாரைக்கண்டறியாய்; நித்யஸூரிகள் பிரிந்தறி
யார்கள். ஸம்ஸாரிகள் பிரிவறியார்கள்; இவ்வாற்றாமையையுடையார் இவரொருவருமேயாயிற்று.
[காணுமாறருளாய்] திருவாறன்விளையைத் திருநகரியிலேயணித்தாக்குதல், நான் கால்நடைதந்துபோய்ப்
புகவல்லேனும்படி பண்ணுதல் செய்யாய்! 'இப்படி நாமெங்கே செய்யக்கண்டு நிர்ப்பந்திக்கிறீர்?' என்ன,—
[காகுத்தா] - ககுத்ஸ்த்த வம்சத்திலே அவதரித்து உன்வடிவை எல்லார்க்கும் காட்டிற்றிலையோ?
"ரூபஸம்ஹநநம் லக்ஷ்மீம்", ககுத்ஸ்த்வம்சே விமுகா: ப்ரயாந்தி" என்னும்படியன்றோ? [கண்ணா] -
ருஷிகளுக்கேயன்றிக்கே "தாஸாமாவிரபூத்" என்று இடைப்பெண்களுக்கு உன்னைக் காட்டிற்றிலையோ?
[தொண்டனேன் கற்பகக்கனியே] - எனக்கு உபகரித்ததுகிடக்க, பழங்கிணறு கன்வாருகிறதென்?
விஷயாந்தரங்களிலே சபலனான என்னை அத்தைத்தவிர்த்து நீயேவந்து உன்னை எனக்கு ஸர்வஸ்வதாநம்
பண்ணினவனே! அயத்நஸித்தபோக்யனானவனே! [பேணுவார் அமுதே] - உன்பக்கல் ஆசாலேசமுடை
யார்க்கு நிரதிசயபோக்யனானவனே! கலங்குகையும், அக்ரமமாகக் கூப்பிடுகையும் மிகையாம்படியன்றோ
உன்படியிருப்பது? [பெரிய இத்யாதி] - ஆர் உன்னைப் பேணி, ப்ரளயங்கொண்ட ஜகத்தையெடுத்து
ரக்ஷித்தது? ப்ரளயார்ணவம் சூழ்ந்த மஹாப்ருதிவியை யதினின்றும் உத்தரித்த பெரியோனே! உன்னை
ஆசைப்படுதல், ஆபத்தையறிவித்தல் செய்யமாட்டாத ஜகத்தையன்றோ ரக்ஷித்தது? நீ யறிய ஆபத்துண்டா
மத்தனையன்றோ ரக்ஷிக்கைக்கு வேண்டுவது? [பேராளா] - ரக்ஷ்யதி ளளவல்லாதபடியான ரக்ஷகனுடைய
பாரிப்பு.

ஙு.— இரண்டாம்பாட்டு. காணவேணுமென்று மிகவும் நோவுபட்டிருக்கும் இருப்பே
யோ என்திறத்துச் செய்தருளப் பார்த்தது? நான் இங்ஙன் படாமே உன்னைக் காணும்படி
க்ருபை பண்ணியருளவேணுமென்கிறார்.

[காணுமாறருளாய்] - ஒருகால் "காணுமாறருளாய்" என்றால், அப்போதே செய்யக்காணு
விட்டால் "நாமே ப்ரவர்த்தித்துப் பெறுகிறோம்" என்றிருக்குமவரன்றே. வர்ஷதாரையா
லல்லது தரியாத சாதகம்போலே அவனருளே பார்த்திருக்குமவராகையாலே, திரியட்டும்
"காணுமாறருளாய்" என்கிறார். [என்றென்றே] - பலகாலும் வார்த்தை இதுவே. "புறம்பேயும்
ஒரு புகலுண்டு" என்றிருக்கிலிறே அத்தைப் பற்றுவது. [கலங்கி] - கலக்கமேயாயிற்று ஏறி
வருவது; *ஜடிலம் சீரவஸநம்*. [கண்ணநீரலமர] - நிரம்பின ஏரிகளுக்குப் பரீவாஹம்போலே
கலங்ின கலக்கம் உள்ளடங்காமல் கண்ணநீராய் ப்ரவஹியா நிற்கும். [வினையேன்] - இதுக்கு
முன்பு இவ்வஸ்துவைக்காண ஆசைப்பட்டாரில் கலங்கிக் கண்ணநீர் பார்த்து அறிவாரில்லை
மூர்! "காணவேணும்" என்கிற ஆசாலேசமுடையார்க்குத் தன்னைக்காட்டி. அவர்கள்கண்ண
நீரையுந் துடைக்குமவனை ஆசைப்பட்டுக் கிடையாதே, கண்ணுங்கண்ணநீருமாம்படியான
பாபத்தைப் பண்ணினேன். [பேணுமாறெல்லாம் பேணி] - பேணுகை - ஆசைப்படுகை.
முதலிலே அயோக்யன் என்று அகன்று, "அவன் விரும்பாத நானும் என்னுடைமையும் எனக்கு
வேண்டா" என்று ஆற்றாமையாலே மடலெடுக்கையிலே கைவைத்து, பலபடியும் ப்ரபத்தி
பண்ணி, ப்ரணயரோஷம் தலையெடுத்துக் கிலாய்ப்பதுஞ் செய்தவிடத்திலும். [நின்பெயரே
பிதற்றுமாறருளெனக்கு] - நீ எனக்கு அருளப்பார்த்தபடி, நின்பெயரே பிதற்றுமாறாய்விட்டது;
உன்னைப்பெறாத வ்யஸநத்தாலே உன்னுடைய திருநாமங்களைச்சொல்லி அக்ரமமாகக் கூப்பிடும்
படியோ நீ எனக்குப் பண்ணும் க்ருபை? நீசவிஷயங்களை ஆசைப்பட்டுக் கூப்பிடுமது தவிர்ந்து
நம்பேரைச்சொல்லிக் கூப்பிடும்படிபண்ணினோமாகில் இனியென்? என்றிருக்கிறாயோ? ஸம்ஸாரி
களில் வ்யாவ்ருத்தியோ எனக்கு வேண்டுவது? என் அபிமதம் பெற வேண்டாவோ? [வினை

யேன் பேணுமாறெல்லாம்பேணி] - பேணுதல் - ஆசைப்படுதல் ஆசைப்படும் வழியெல்லாம் ஆசைப்பட்டு. பலவழியுண்டோ ஆசைப்பாட்டில் என்னில்? - உண்டு; வருத்தவிஷயத்திலாசை, அபிமத விஷயத்தில் ஆசை. இவர்க்கு வருத்த விஷயம் அபிமதமாயிருக்கும். வருத்த விஷயத்திலாசை க்ரமமாயிருக்கும். அபிமதவிஷயத்திலாசை வரம்பழிந்திருக்கும். வருத்தவிஷயத்திலாசைக்கு, அவனைக்கால் கட்டக்கிடைக்கும்; அதுவும் செய்தாரிறே; "கோற்ற கோன்பு" "ஆராவமுது" "மானேய்நோக்கு" "பிறந்தவாறு," "உலகமுண்டபெருவாயன்" இவற்றிலே. அபிமதவிஷயத்திலாசைக்கு, அபிமதன்பாடேறத் தூதுவிடுகை தொடக்கமாக மடலெடுக்கை முடிவாகத் துணிகை; அவையுமெல்லாம் செய்தாரிறே "அஞ்சிறையமடநாரை" தொடக்கமாக, "மாசறுசோதி," "வைகல்பூங்கழிவாய், "பொன்னுலகாளீர்" இத்யாதிகளிலே. இப்படி பேணுமாறெல்லாம் பேணியும் நின்பெயரேபிதற்றுமாறே நீ எனக்கு அருளும் அருள் என்கிறார். [அந்தோ] - உன்னை நீ பிரிந்தறியாய், பிரிந்தாரைக் கண்டறியாய். நித்யஸூரிகள் பிரிந்தறியார்கள், ஸம்ஸாரிகள் பிரிவறியார்கள்; இவ்வாற்றாமை யுடையேன் நானொருவனுமேயாயிற்று. [காணுமாறருளாய்] - திருவாறன் விளையை அணித்தாக்குதல், எனக்கு அவ்வளவும் கால்நடை தருதல் செய்யும்படி பண்ணாய். இப்படி நீர் எங்கே அருளக்கண்டு நிர்ப்பந்திக்கிறீர்? என்ன, [காகுத்தா *ககுத்ஸ்த்தவம்சே விமுகா: ப்ரயாந்தி.* *ரூபஸம்ஹநநம்* ஸம்ஸ்த்தாநந்தன்னை. *லக்ஷ்மீம்* ஸமுதாயசோபையை. *ஸௌகுமார்யம்* - அநுகூலர்க்கும் அடுத்துப்பார்க்கப் பொறாதிருக்கை, *ஸுவேஷதாம்* தாபஸவேஷம். *தத்ருசுர்விஸ்மிதாகாரா:* - விஸ்மிதாந்த:கரணராய்க்கொண்டு கண்டார்கள். ஆர்தான்? என்னில், [வநவாஸிந:] படைவீட்டிலுள்ளார் காணப்பெறாததைச் சருகிலைதின்று தூற்றிலே கிடந்தவர்கள் பெற்றார்கள். 'அதுஒரு காலம் அங்ஙனேசெய்து போனோமாகில், அதுகொண்டு வளைக்கிறீரோ?' என்ன? [கண்ணா] - ருஷிகளுக்கேயன்றிக்கே, *தாஸாமாவிரபூத்* என்று இடைச்சிகளுக்கும் இடையர்க்கும் காட்டிற்றிலையோ? புறம்பு தேடிப்போகிறதென்? [தொண்டனேன் கற்பகக்கனியே]-சப்தாதிவிஷயங்களிலே அக்யபரனாய், அவற்றிலே சபலனாய்த் திரிகிற என்னை, அத்தைத் தவிர்த்து உன்னை ஸர்வஸ்வதாநம்பண்ணினவனே! [பேணுவாரமுதே] - நீயே வந்து மேல்விழாநின்றால் 'அல்லோம்' என்றுதார்க்கும் நிரதிசயபோக்யனானவனே! [பெரிய இத்யாதி] ஆர் உன்னைப்பேண ப்ரளயங்கொண்ட ஜகத்தை எடுத்துரக்ஷித்தது? ப்ரளயார்ணவஞ்சூழ்ந்த மஹாப்ருதிவியை அதினின்றும் உத்தரித்த பெரியோனே! உன்னை ஆசைப்படுதல் ஆபத்தைபரிஹரித்தல் செய்யமாட்டாத ஜகத்தையன்றோ ரக்ஷித்தது? நீ அறிய ஆபத்து உண்டாமத்தனையன்றோ ரக்ஷிக்க வேண்டுவது? [பேராளா] - ரக்ஷ்யத்தினளவல்லாத ரக்ஷகனுடைய பாரிப்பு.

**எடுத்தபேராளன் நந்தகோபன்தன் இன்னுயிர்ச்சிறுவனே!* அசோதைக்கு**
**அடுத்தபேரின்பக்குலவிளங்களிறே! அடியனேன்பெரியவம்மானே!***
**கடுத்தபோரவுணனுடலிருபிளவாக் கையுகிராண்டஎங்கடலே!***
**அடுத்ததோருருவாய்இன்றுநீவாராய் எங்ஙனந்தேறுவருமரே? (3)**

ஓ.—மூன்றாம்பாட்டில், ஆச்ரிதஸுலபனாயிருக்கிற நீ, இன்று வந்து என் ஆபத்தை நீக்காதொழியில், உன்குணமே ஜீவநமாயிருக்கும் உன்னுடையார் எங்ஙனே தரிக்கும்படி? என்கிறார். [எடுத்த என்றுதொடங்கி] - நிதியெடுத்தாப்போலே உன்னையெடுத்துக் கொண்ட பாக்யாதிகரான ஸ்ரீ நந்தகோபருடைய நற்சீவனான சிறுவனே! [அசோதைக்கு என்றுதொடங்கி] - யசோதைப்பிராட்டிக்கு வருத்தமின்றிக்கே கிட்டுதலுஞ் செய்து அவர்களுக்குப் பேரின்பத்தை விளைக்கும் ஸ்வபாவனாய் இடைக்குலத்துக்கு ஆனைக்கன்றுபோலே ச்லாக்யனானவனே! [அடியனேன் பெரிய அம்மானே] - எனக்கு எட்டவொண்ணாத ஈச்வரனானவனே! [கடுத்த என்றுதொடங்கி] - ஸ்ரீ ப்ரஹ்லாதாழ்வானுக்காக அப்போதைக்கு போக்யமான வடிவைக்கொண்டு புத்தகண்டுதேனியையுடைய ஹிரண்யனுடைய உடல் இருபிளவாம்படி கையுகிராண்ட அபரிச்சேத்யமான வடிவையுடைய நீ, எனக்கு இப்படிப்பட்ட ஆபத்து வர்த்திக்கிறஇன்று எனக்கு து:க்கந் தீரவந்து தோற்றுகிறிலை!

இ.—மூன்றாம்பாட்டில், ஆச்ரித ஸௌலப்யனாயிருக்கிற நீ இன்று வந்து என் ஆபத்தை நீக்காதொழியில், உன்குணமே ஜீவநமாயிருக்கிற ஆச்ரிதர் உன்னை எங்ஙன் விச்வஸிக்கும்படி? என்கிறார். [எடுத்த பேராளன்] - நிதியெடுத்தாப்போலே உன்னை யெடுத்துக்கொண்ட பாக்யாதிகன். நெடுநாள் நோன்பு நோற்றுப் பெற்று முகத்திலே விழிக்கப்பெறாதே, சிலர் போரவிட்டிருக்க, நிதியெடுத்தாப்போலே யெடுத்து புத்ரமுகம் கண்டார் இவரிறே. முன்பு ரிக்தனாய்ப்போந்தவன் கனக்க ஜீவிக்கப்புக்கவாறே, "இவன் எடுப்பெடுத்தான்" என்பர்களிறே. [பேராளன்] - பெரியோன், அவன்பெருமையோபாதி போரும்கிடீர் என் சிறுமை! "நீ மகனாகவேணும்" என்றார்க்கோ முகங்காட்டலாவது? [நந்தகோபன் இத்யாதி] - ஸ்ரீ நந்தகோபருடைய நற்சீவன் ஒரு வடிவுகொண்டு புத்ரனாய் உலாவுகிறபடி. க்ருஷ்ணாவதாரத்திலே வெண்ணெய் களவுகண்டு பவ்யனாய்த்திரிந்த நாளுநாளுமாயிற்று, இவர் தமக்கு ப்ரயோஜநாம்சமாக நினைத்திருப்பது. கீழ் பரத்வத்தை 'மண்பற்றென்று' கழிப்பர்; கம்ஸவதத்துக்குமேல் 'துனிக்கரும் பென்று' கழிப்பர். [அசோதைக்கடுத்த] - அவளுக்கு வந்து கிட்டிக்கொடு நிற்கக்கண்ட இத்தனை. ப்ரஸவவேதநாக்லேசத்தாலே மயங்கிக் கிடந்தவள் உணர்ந்துவந்த வனந்தரம், இவன்முகத்தைப் பார்த்து விழித்தவித்தனை: 'ததர்ச ச ப்ரபுத்தாஸா யசோதா ஜாதமாத்மஜம்" [பேரின்பம்] - நிரதிசயஸுகத்தை விளைத்தவன்: "தொல்லையின்பத் திறுதிகண்டாளே" என்கிறபடியே. அந்தமில் பேரின்பத்தைச் சிற்றின்பமாக்கினான். [குல விளங்களிறே] - இடைக்குலத்துக்கு ஆனைக்கன்றுபோலே ச்லாக்யனானவனே! அபிஜாதமாய்ப் பருவத்தாலே ஆகர்ஷகமாயிருப்பதொரு மத்தகஜம்போலே, யசோதைப் பிராட்டிக்குப் பிடிகொடாதே திரியும்படி என்னவுமாம்; அகப்பட்ட போது, "யதி சக்நோஷி கச்சஸ்வம்" என்னும்படியிறே இருப்பது; "தறியார்ந்தகருங்களிறே போலநின்று தடங்கண்கள் பனிமல்கும் தன்மையானை" என்னக் கடவதிறே. [அடியனேன்பெரிய அம்மானே] - விபரீதஜ்ஞாந முடையார்க்கோ வந்துகிட்டலாவது? ஸ்வரூபஜ்ஞாநமுடையார்க்கு வந்து கிட்டலாகாதோ? அடியே னென்றிருப்பார்க்கோ உன் பெருமையெல்லாங் காட்டுவது? [கடுத்தபோரித்யாதி] - யுத்தகண்டூதி வர்த்திக்கிற ஹிரண்யனுடைய உடலானது இரண்டு கூறாம்படியாக. [கையுகிராண்ட] - "படையாண்டான்" என்னுமாபோலே. [எங்கடலே] - "மகாவிஷ்ணும்" என்கிறபடியே, அபரிச்சேத்யமான வடிவையுடையவனே! ப்ரஹ்லாதனுக்கு ப்ரதிஜ்ஞாஸமகாலத்திலே வந்து உதவினதும் தமக்கு உதவினதாக நினைத்திருக்கிறார். [அடுத்ததோருருவாய்] அப்போதைக்கு யோக்யமான வடிவைக்கொண்டு. "நரஸ்யார்த்ததநும் க்ருத்வா ஸிம்ஹஸ்யார்த்ததநும் ததா" என்கிறபடியே அவன்வரத்தில் அகப்படாத வடிவைக்கொண்டு; பதற்றத்தாலே ஒன்றினுடலையும் ஒன்றின் தலையையும் ஒன்றாகச் சேர்த்துக்கொண்டு வந்தா னென்னவுமாம். [இன்று நீ வாராய்] - அன்றுமின்றுமாயிற்று உதவவேண்டும்நாள்; அன்று உதவினாய், இன்று உதவுகிறிலை. விபரீதஜ்ஞாநமுடையார்க்கு உதவினாய்: யதாஜ்ஞாநமுடையார்க்கு உதவினாய்: இரண்டுகோடிக்கும் புறம்போ நான்? "மகன்" என்று கலங்கினவனுக்கு உதவினாய்: "மத்தஸ்ஸர்வமஹம்ஸர்வம்" என்கிற தெளிவையுடையவனுக்கு உதவினாய்; "என்றென்றே கலங்கி" என்கிற கலக்கத்தையுடைய எனக்கேயோ உதவலாகாது? [எங்ஙனம் தேறுவர் உமரே] - நீ வாராவிட்டால் நான் முடிகிறேன்: அது கிடக்க: உன் குணஜ்ஞாநத்தாலே தரிக்கிற ஆச்ரிதர் எங்ஙனே தரிப்பர்கள் என்னுதல்: "உன்குணங்களே தஞ்சம்" என்றிருக்குமவர்கள் எங்ஙனே உன்னை விச்வஸிக்கும்படி? என்னுதல்.

௩-டு.—மூன்றாம்பாட்டு. ஆச்ரிதஸௌலப்யனாயிருக்கிற நீ இன்றுவந்து என் ஆபத்தை நீக்காதொழியில், உன்குணமே ஜீவநமாயிருக்கிற ஆச்ரிதர் உன்னை எங்ஙனே விச்வஸிக்கும்படி? என்கிறார்.

[எடுத்தபேராளன்] - நிதியெடுத்துக்கொண்டாப்போலே உன்னை யெடுத்துக்கொண்ட பாக்யாதிகன். இருவருமொக்க நோன்புநோற்க, அவர் பெற்று முகத்திலே விழிக்கப்பெறாதே போரவிட்டிருக்க, நிதியெடுத்தாப்போலே யெடுத்து புத்ரமுகங்கண்டவரிறே. முன்பு ரிக்தனாய்ப் போந்தவன் கனக்க ஜீவிக்கப்புக்கவாறே, "இவன் எடுப்பெடுத்தான்" என்பர்களிறே. [பேராளன்] - பெரியோன். அவன்பெருமையோபாதியும் போரும்கிடீர் என் சிறுமையும்; "நீ மகனாகவேணும்" என்பார்க்கோ முகங்காட்டலாவது? ஸ்ரீநந்தகோபருடைய நற்சீவன் கண்ணுக்குத்தோற்ற ஒருவடிவுகொண்டு திரிகிறவித்தனை. [அசோதைக்கடுத்த] - ஒக்கநோற்கச் செய்தேயும் க்லேசம் மிக்கிருக்குமிறே, உடம்பு நொந்து பெற்றவளாகையாலே; இவள் ப்ரஸவவேதனை அநுபவியாதிருக்கப் பெற்றுக்கொடுநின்றாளித்தனை, கிட்டிக்கொண்டுநிற்கக் கண்டதித்

தனை; *தத்ர ச ப்ரபுத்தாஸா யசோதா ஜாதமாத்மஜம்*. [பேரின்பம்]-நிரதிசயஸுகத்தை விளைத்தவன்; "தொல்லையின்பத்திறுதிகண்டாளே" என்னும்படி இவளுக்கு நிரதிசய ஆநந்தத்தை விளைத்தானாயிற்று. அத்தயில் பேரின்பத்தைச் சிற்றின்பமாக்கினான். [குலவிளங்களிறே] - இடைக்குலத்துக்கு ஆனைக்கன்றுபோலே ச்லாக்யமானவனே! அபிஜாதமாய், பருவத்தாலே ஆகர்ஷகமா யிருப்பதொரு மத்தகஜம்போலே, யசோதைப்பிராட்டிக்குப் பிடிகொடாதே திரியும்படி என்னவுமாம்! அகப்பட்டாலும் ஆனைக்கன்றுபோலே யாயிற்று இருப்பது; "தறியார்ந்த கருங்களிறே போலநின்று" என்கிறபடியே ஒருகம்பத்தோடே சேர்ந்த களியானைபோலே யாயிற்றுக் கட்டுண்டுநிற்கும்போதும் இருக்கும்படி. "தடங்கண்கள்பனிமல்கும்" - இவள் *யதி சக்னோஷி என்றால் பின்னை அவனுக்குக் கண்ணநீர்பாய்கைக்கு மேற்படவில்லை; ஸர்வசக்தி அசக்தனென்று தோற்றவிருக்கையிறே இவள் நியமிக்க வல்லளாகிறது? "தன்மையானை" - ஆச்ரிதர்ட்ட வழக்காகையே ஸ்வபாவமாகவுடையவனை? [அடியனேன் பெரியவம்மானே] - உன்னை "மகன்" என்றிருப்பார்க்கோ உதவலாவது, முறையுணர்ந்திருப்பார்க்கு உதவலாகாதோ? நான் முறையிலேநின்றவாறே நீயும் முறையிலேநில்லாநின்றாய். "அடியேன்" என்று நான் சொல்ல, நீ ஈச்வரனுயிராநின்றாய். [கடுத்த இத்யாதி] - யுத்தகண்டூதியையுடையனான ஹிரண்யாஸுரனுடலை இரண்டுபாதியாம்படி. [கையுகிராண்ட] - "படையாண்டான்" என்னுமாபோலே. [எங்கடலே] - *மஹாவிஷ்ணும்* என்னும்படி பெரியகிளர்த்தியோடேவந்து ப்ரஹ்லாதனுக்கு உதவின அது தம்பேறாயிருந்தபடி. [அடுத்ததோருருவாய்] - இவன் எங்கே காட்டப்புகுமோன் என்று அறியாமையாலே எங்குமொக்கச் சினைத்துக்கொடு நின்றாய். ஒன்றை அறுதியிட்டுத் தோற்றப்பற்றாதபடி அவன்மிகைக்கையாலே அப்போதைக்கு போக்யமானவடிவைக்கொண்டு. *நரஸ்யார்த்ததநும் க்ருத்வா ஸிம்ஹஸ்யார்த்ததநும் ததா* என்கிறபடியே அவன்வரத்திலே அகப்படாத வடிவைக்கொண்டு; பதற்றத்தாலே ஒன்றினுடலையும் ஒன்றின்தலையையும் சேர்த்துக்கொண்டு வந்தானென்னுமாம். அடுத்ததோருருவாயிற்றுக் கடுத்த போரவுணனுடல் பிளந்தது. [இன்று நீ வாராய்] - அன்றுமின்றும் ஆயிற்று உதவ வேண்டுவது? அன்று உதவினாய், இன்று உதவுகிறிலை. விபரீதஜ்ஞாநமுடையார்க்கு உதவினாய், யதாஜ்ஞாநமுடையார்க்கு உதவினாய், இவ்விரண்டுகோடிக்கும் புறம்போ நான்? "மகன்" என்று கலங்கினவனுக்கு உதவினாய்; *மத்தஸ்ஸர்வ மஹம்ஸர்வம்* என்னுந் தெளிவுடையவனுக்கு உதவினாய்: "என்றென்றே கலங்கி" என்கிற கலக்கமுடைய எனக்கேயோ உதவலாகாதது? நீ வாராதொழிந்தாலும் ஜீவிக்க ஆசையுடையார்க்கேயிறே உன்னைக் காற்கட்டவேண்டுவது. அதுகிடக்கிடீர்; ஆனால், நீர் எதுக்குப் படுகிறீர்? என்ன, - [எங்ஙனம் தேறுவர்உமரே] - இவ்வளவில் நீ முகங்காட்டாவிட்டால், உன் குணஜ்ஞாநத்தாலே ஜீவிக்குமவர்கள் பிழைப்பர்களோ? "உன்குணங்களே தஞ்சம்" என்றிருக்கிறவர்கள் எங்ஙனே உன்னை விச்வஸிக்கும்படி? என்னுதல்.

உமருகந்துகந்தவுருவம்நின்னுருவமாகி உன்தனக்குஅன்பரானா
ரவர்* உகந்தமர்ந்தசெய்கையுன்மாயை அறிவொன்றுஞ்சங்கிப்பன்
[வினையேன்*
அமரதுபண்ணியகலிடம்புடைசூழ் அடுபடையவித்தஅம்மானே*
அமரர்தமமுதே!அசுரர்கள்நஞ்சே! என்னுடையாருயிரேயோ. (4)

ஒ.—நாலாம்பாட்டில், ஆச்ரிதர்உகந்த ரூபசேஷ்டிதாதிகளையே நிருபகப்புதி என்னும் இவ்வறிவு ஒன்றிலுமே தரித்திருக்கிற நான், அவ்வறிவு பொய்யோவென்று சங்கியாநின்றேனென்கிறார். [அமரதுபண்ணியென்று மேலுக்கு] - பாண்டவர்களுக்காக மஹாயுத்தத்தைப் பண்ணி மஹாப்ருதிவியெல்லாம் வ்யாபித்து நலிகிற ஸேநையை முடித்தபெரியோனே! இச்செயலாலே தேவர்களுக்கு இனியையாய் அஸுரர்களுக்குநஞ்சாய் எனக்கு தாரகனானவனேயோ?

இ.—நாலாம்பாட்டில், உன்னை ஆச்ரிதரிட்ட வழக்காக்கி வைப்புதி என்னும் அறிவுஒன்றுணுமே தரித்திருக்கிற நான், அதுவும் பொய்யோவென்று சங்கியாகின்றேன் என்கிறார். [உமருகந்துகந்தவுருவம் நின்னுருவமாகி] - உனக்கு அஸாதாரணராயிருப்பார் எப்போதுமுகந்த ரூபமே உனக்குத்திருமேனியாக நினைத்திருப்புதி என்னுதல், உனக்கு அஸாதாரணராயிருப்பாருகந்தவத்தாலே நீயுகந்திருக்கும் வடிவிறே உனக்கு வடிவாய்விட்டது என்னுதல். ''தமருகந்ததெவ்வுருவம்'' ''தாம்ஸ்ததைவபஜாம்யஹம்''. [உன் றனக்கன்பராணுரவர்]-உன்பக்கலிலே ப்ரேமபரவசராயிருக்குமவர்கள். [உகந்து] - அத்யாதரத்தைப்பண்ணி. [அமர்ந்தசெய்கையுன்மாயை] - ப்ரயோஜநநிரபேக்ஷமாகக் கிட்டவேண்டும் செயல்கள், உன்னுடைய ஆச்சர்யசேஷ்டிதங்கள். [அறிவொன்றும் சங்கிப்பன்] - தன்னை ஆச்ரிதரிட்டவழக்காக்கும் அறிவேயா யிற்று, இவர் உஜ்ஜீவநஹேதுவாக நினைத்திருப்பது? அதொன்றிலும் சங்கைபண்ணுகின்றேன்; [வினையேன்] - நான்கண்ணழிவுசுழிலிட்டு அதிசங்கைபண்ணினபோதாக ஸ்வரூபாநுபந்தியானகுணங்க ளில்லையாகாதிறே; அதிலே அதிசங்கைவர்த்திக்கைக்கடி என் பாபமிறே. [அமர்இத்யாதி] - ஆச்ரித பக்ஷபாதியென்னு மிடத்திலே உதாஹரணங்கள் காட்டுகிறார்; [அமரது பண்ணி] - அந்தமஹாபாரத யுத்தத்தைப்பண்ணி. ''பெரியபாரதங்கைசெய்து'' என்கிறபடியே ஸாரத்யவேஷத்தோடே கையாளாய், உடம்புக்கிடாதே தன்னைப்பேணுதே நின்று போரைவிளைத்து. [அகலிடம்பொழில்சூழ்] பெரும்பரப்பை யுடைய பூமியெல்லாம். பொழில் - பூமி- [சூழடுபடை] - வ்யாபித்துநலிகிற ஸேனையை ஸர்வதோதிக் கமாகச் சூழ்ந்துகொண்டு கொல்லவந்த ஸேனையை. [அவித்த] - ''ஸாரதி, ஸாரதி'' என்று வாய்பாறிக் கொண்டுவந்த துர்வர்க்கத்தைமுடித்த. [அம்மானே] - ''தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்யமதிதைவதம்'' என்று ஸர்வஸாதாரணனுமிருக்க, ஆச்ரிதபக்ஷபாதத்தாலே தத்விரோதிகளையழியச்செய்தவனே! [அமரர் தம்அமுதே] - அஸுரர்களையழியச்செய்து குடியிருப்புக்களைக் கொடுக்கையாலே தேவர்களுக்கு நிரதிசய போக்யனானவனே! [அசுரர்கள்நஞ்சே] - ஜந்மத்தாலே அஸுரர்களாயும், ஸ்வபாவதோஷங்களாலே அஸுரர்களாயுமுள்ளவர்களுக்கு ஆற்றவொண்ணுதநஞ்சானவனே! [என்னுடையாருயிரேயோ] - எனக்கு ஸத்தாஹேதுவானவனே! அநுகூலர்க்கு போக்யனும் ப்ரதிகூலர்க்கு நஞ்சாயிருக்கிற இரண்டும் எனக்கு தாரகம் என்றுமாம்.

ஈடு.—நாலாம்பாட்டு. ''உன்னை ஆச்ரிதரிட்டவழக்காக்கிவைப்புதி'' என்னும் அறிவு ஒன்றுமே தரித்திருக்கிற நான், அதுவும் பொய்யோவென்று சங்கியாநின்றேனென்கிறார்.

[உமருகந்துகந்தவுருவம்நின்னுருவமாகி] - உனக்கு அஸாதாரணராயிருப்பார் மாறுதே உகந்தவடிவை உனக்குத் திருமேனியாகக்கொள்ளுவுதியென்னுதல், உனக்கு நல்லராயிருக்கு மவர்கள் உகக்கத்தாலே நீயுகந்து அது உனக்கு வடிவென்னுதல். *யே யதாமாம் ப்ரபத்யந்தே தாம்ஸ்ததைவ பஜாம்யஹம்* என்னுமாபோலே; ''தமருகந்ததெவ்வுருவம்'' இத்யாதி. [உன் தனக்கன்பராணுரவர்] - உன்பக்கல் ப்ரேமபரவசராயிருக்குமவர்கள். [உகந்து] - அத்யாதரத் தைப்பண்ணி. [அமர்ந்தசெய்கை உன்மாயை] - ப்ரயோஜநநிரபேக்ஷமாகக் கிட்டவேண்டும் செயல்கள், உன்னுடைய ஆச்சர்யசேஷ்டிதங்கள். [அறிவொன்றும்சங்கிப்பன்] - இந்த ஒரு குணத்தையும்பற்றின அறிவாயிற்று இவர்க்கு ஸத்தாஹேது; அதிலேயாயிற்று இப்போது இவர்க்கு அதிசங்கை வர்த்திக்கிறது. [வினையேன்] - நாளொருவன் கண்ணழிவுசுழலையிட்டு அதிசங்கைபண்ணுங்காட்டில், ஸ்வரூபாநுபந்திகுணங்களில்லையாகாதிறே; அதிலே அதி சங்கை பண்ணுகிறது, நான் பண்ணின பாபமிறே; *க்யாயத: ப்ராஜ்ஞ: க்ருதஜ்ஞச்ச ஸாநுக்ரோசச்ச ராகவ: — ஸத்வ்ருத்தோ நிரநுக்ரோசச்சங்கே மத்பாக்யஸங்க்ஷயாத்* இப்படிப்பட்ட குணங் களுடையவர்க்கு நான் அதிசங்கை பண்ணுங்காட்டில் அவையில்லையாகிறதன்றிறே; நான் சங்கிக்கைக்கடி என்பாக்யஹாநி என்றாளிறே. [அமரதுபண்ணி] - ஆச்ரிதபக்ஷபாதி என்னு மிடத்துக்கு உதாஹரணங்காட்டுகிறார்; அந்த அமரைப்பண்ணி. மஹாபாரதமிறே; பூமிப் பரப்படைய வெளியும்படியிறே வந்து சூழ்ந்துகொண்டது. [சூழ் அடுபடையவித்த] - ஸர்வ தோதிக்கமாகச்சூழ்ந்துகொண்டு கொல்லவந்த ஸேனையை அவித்த. துர்வர்க்கமடைய காட்டுத் தீ கிளர்ந்தாப்போலே கிளர்ந்து, ''ஸாரதி, ஸாரதி'' என்று வாய்பாறிக்கொண்டுவந்து தோற்ற அவர்கள்கிளர்த்தியை அவித்தானுயிற்று. ''மழைகொலோ வருகின்றது'' என்று சொல்லுகிற க்ருஷ்ணனுகிற காளமேகமிறே ஏறியவித்தது. [அம்மானே] - ஸர்வஸ்வாமியா

யிருந்துவைத்து ஆச்ரிதபக்ஷபாதத்தாலே அநாச்ரிதரைக் கிழங்கெடுத்துப்போகட்டானித்தனை. [அமரர்தமமுதே] - தேவர்களுக்காக ஆஸுரப்ரக்ருதிகளோடே அம்பேற்றுப்பண்ணின வ்யாபாரங்களாலே அவர்களுக்கு நிரதிசயபோக்யனாயிருக்கும்படி. [அசுரர்கள்நஞ்சே] - ஜந்மத்தாலே அசுரர்களாயும் ஸ்வபாவத்தாலே அசுரர்களாயு முள்ளவர்களுக்கு ஆற்ற வொண்ணாத நஞ்சானவனே! [என்னுடையாருயிரேயோ] - எனக்கு ஸத்தாஹேதுவானவனே! தேவர்களுக்கு போக்யனாய் அஸுரவர்க்கத்துக்கு நஞ்சாயிருக்கிறவிருப்பு தமக்கு ஸத்தாஹேதுவாயிருக்கிறபடி.

**ஆருயிரேயோ! அகலிடமுழுதும் படைத்திடந்துண்டுமிழ்ந்தளந்த***
**பேருயிரேயோ! பெரியநீர்படைத்து அங்குறைந்ததுகடைந்தடைத்துடைத்த***
**சீரியரேயோ! மனிசர்க்குத்தேவர்போலத் தேவர்க்குந்தேவாவோ ***
**ஒருயிரேயோ! உலகங்கட்கெல்லாம் உன்னை நான்எங்குவந்துறுகோ. (5)**

ஒ.—அஞ்சாம்பாட்டில், காண்கைக்கீடான ஸாதநாநுஷ்டாநத்தைப் பண்ணி என்னைவந்து காணீர் என்னில்; நான் யத்நம்பண்ணி வந்து காண்கையென்று ஒருபொருளில்லை; ஸர்வநிர்வாஹகனான நீ உன்னை எனக்குக் காட்டவேணுமென்கிறார். [ஆருயிரேயோ] - எனக்கு தாரகனானவனே! [அகலிடமென்று தொடங்கி] - கேவலக்ருபையாலே ஜகத்தினுடைய ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணின பெரியோனே! [பெரியநீரென்று தொடங்கி] - ஜலஸம்ருத்தியைப் பண்ணி அங்கே சயநாதிகளைப் பண்ணின சீரியவனே! [மனிசர்க்கென்று தொடங்கி] - ஐச்வர்ய பரிசரணாதநாதிகளால் மநுஷ்யரிற்காட்டில் தேவர்கள் விலக்ஷணமாயிருக்குமா போலே அவற்றால் தேவர்களுக்கும்விலக்ஷணனானவனே! [ஒருயிரேயோ உலகங்கட்கெல்லாம்] - எல்லார்க்கும் நீயே ஆத்மாவானவனே!

இ.—அஞ்சாம்பாட்டில், "சாஸ்த்ரபலம் ப்ரயோக்தரி" என்று பேறு உம்மதாகில் ஸாதநமும் உம்முடைய தலையிலேயாக வேண்டாவோ? என்ன, 'நான் யத்நம் பண்ணிவந்து காண்கையென்றொரு பொருளில்லை' என்கிறார். [ஆருயிரேயோ] - சரீரரக்ஷணம் ஆத்மாவதன்றோ? சரீரந்தான் தன்னை ரக்ஷித்துக்கொள்ளவோ? ஸம்பந்தமேயோ வுள்ளது, அநுஷ்டாநமில்லையோ?' என்கிறார். [அகலிடமுழுதும் படைத்து] - "பஹுஸ்யாம்" என்று பூமிப்பரப்பையடைய ஸ்ருஷ்டித்து, இத்தை ப்ரளயங்கொள்ள மஹாவராஹமாயுத்தரித்து, பின்பு ப்ரளயங் கொள்ளப்புக வயிற்றிலேவைத்துரக்ஷித்து, உள்ளிருந்து நோவுபடாமே வெளிநாடுகாண வுமிழ்ந்து, மஹாபலியாலே அபஹ்ருதமான தசையில் எல்லைநடந்து மீட்டுக்கொண்டு, இப்படி யபேக்ஷிப்பாருமின்றிக்கே யிருக்க, கேவலக்ருபையாலே ரக்ஷித்த நீவேண்டாவோ இதுக்கு, ஹிதம்பார்க்கும்போது? [பேருயிரேயோ] - பெரியோனே! [பெரியநீரித்யாதி] - பிராட்டியோடு ஸம்ஸாரிகளோடு வாசியற ரக்ஷிக்கும் சீர்மையைச் சொல்லுகிறது. "த்வயி கிஞ்சித் ஸமாபந்நே" "நமக்கும் பூவின்மிசைநங்கைக்கும் இன்பனை" என்கிறபடியே. [பெரியநீர்படைத்தங்குறைந்து] - ஏகார்ணவத்தை ஸ்ருஷ்டித்து ஸ்ருஷ்ட்யர்த்தமாக அதிலே கண்வளர்ந்து. [அதுகடைந்து] - பிராட்டியை லபிக்கைக்காக அத்தைக் கடைந்து, அவளோடே ஸம்ச்லேஷிக்கைக்காக அத்தையடைத்து, அவ்வருகுண்டான ராக்ஷஸர் ஆச்ரிதரை நலியாதபடி அத்தையுடைத்த. [சீரியரேயோ] - நித்யாச்ரிதையோடு அல்லாதாரோடு வாசியற விஷயீகரிக்குந்தனை சீரியவனே! [மனிசர்க்குஇத்யாதி] - ஐச்வர்யத்தாலும் கௌரவத்தாலும் மநுஷ்யர்களிற்காட்டில் தேவர்கள் உத்க்ருஷ்டராயிருக்குமாபோலே, அவற்றாலே தேவர்கள் மநுஷ்யஸ்தாநீயராம்படி ஸர்வாதிகனானவனே! ஸர்வாதிகனான நீ வேண்டாவோ, ஹிதசிந்தைபண்ணும்போது? ஸகல சேதநாசேதநங்களுக்கும் ஏகாத்மாவானவனே! ஆத்மா, சரீரத்துக்கு ஹிதசிந்தை பண்ணுமதொழிய, சரீரம் ஸ்வரக்ஷணத்தைப்பண்ண என்பதொன்றுண்டோ? ஆதாரமாய் நியந்தாவாய் சேஷியாயிருக்கிற நீயொழிய, ஆதேயமாய் நியாம்யமாய் சேஷமான இது, ஸ்வரக்ஷண சிந்தைபண்ணவோ? சைதந்யத்துக்கு விநியோகம் "பேறு அவனாலே" என்றிருக்கை, பெற்ற அம்சத்தில் உபகாரஸ்ம்ருதி புண்டாகை, அநுபவிக்கை இவற்றிலேயன்றோ? [உன்னை] - ஆத்மபூதனான உன்னை. [நான்] - சரீரபூதனான நான் ஸாதநாநுஷ்டாநம்பண்ணி வந்துகிட்டவென்பது ஒன்றுண்டோ?

ஈடு.---அஞ்சாம்பாட்டு. *சாஸ்த்ரபலம் ப்ரயோக்தரி* என்று பேறு உம்மதானால் ஸாதநம் உம்முடையதலையிலே ஆகவேண்டாவோ? என்ன, நான் யத்நம்பண்ணி வந்துகாண என்று ஒருபொருளில்லைகாணென்கிறார்.

[ஆருயிரேயோ] - உயிர் நீயாயிருக்க நான் என்ன ஸாதநாநுஷ்டாநம் பண்ணிவந்து கிட்டுவேன்? சரீரரக்ஷணம் ஆத்மாவதன்றோ? சரீரந்தான் தன்னை ரக்ஷித்துக்கொள்ளவோ? ஸர்பந்தமேயோ, அநுஷ்டாநமும் இல்லையோ? என்கிறார்:— [அகலிடமுழுதும்படைத்து] *பஹுஸ்யாம்* என்று பூமிப்பரப்படங்க ஸ்ருஷ்டித்து, ப்ரளயத்திலே நோவுபட மஹாவராஹமாய் எடுத்துக்கொண்டேறி, திரிய ப்ரளயம்வர வயிற்றிலேவைத்து நோக்கி, உள்ளேகிடந்து தளராதபடி வெளிநாடுகாண உமிழ்ந்து, மஹாபலியாலே அபஹ்ருதமான தசையிலே எல்லை நடந்து மீட்டுக்கொண்டு, இப்படி அந்த ஆர்த்ததசைகளிலே அபேக்ஷாநிரபேக்ஷமாக உணர்ந்து நோக்கும் நீயோ இது கிட்டும் விரகு பார்க்கவேண்டாவோ? [பேருயிரேயோ] - பெரியோனே! [பெரியநீர் இத்யாதி]-ஸர்வவிஷயமாகப்பண்ணும் வ்யாபாரத்தோடு பிராட்டிக்காகப்பண்ணும் வ்யாபாரத்தோடு வாசியற்றிருக்கும்படி. [பெரியநீர்படைத்து அங்குறைந்து] - ஏகார்ணவத்தை ஸ்ருஷ்டித்து ஸ்ருஷ்ட்யர்த்தமாக அதிலே கண்வளர்ந்து. [அதுகடைந்து] - பிராட்டியை லபிக்கைக்காக அத்தைக்கடைந்து, அவளோட்டை ஸம்ச்லேஷத்துக்காக அத்தையடைத்து, அவ்வருகுண்டான ராக்ஷஸர் வந்து ஆச்ரிதரை நலியாதபடி அத்தையுடைத்த. [சீரியரேயோ] - நித்யஸூரிகளையோடு அல்லாதாரோடு வாசியற விஷயீகரிக்குஞ்சீர்மையுடையவனே! [மனிசர் இத்யாதி]- ஐச்வர்யத்தாலும் கௌரவ்யதையாலும் மநுஷ்யர்களுக்குதேவர்களிருக்குமாபோலேயாயிற்று, அந்த தேவர்களிற்காட்டில் ஸர்வேச்வரனிருக்கும்படி [ஓருயிரேயோ உலகங்கட்கெல்லாம்] - கேவலசரீரமோ, ஆத்மாவோ, ஹிதசிந்தைபண்ணுவார்? நான் உன்னைப்பெறுகைக்கு ஸாதநாநுஷ்டாநம் பண்ணுகிறேன்,‘ உன்னைப்போலேயிருப்பதொரு தத்த்வாந்தரமுண்டாகில் சொல்லிக்காண். உயிராயிருக்கிற உன்னை சரீரபூதனானநான் என்ன ஸாதநாநுஷ்டாநத்தைப்பண்ணி வந்து கிட்டுவேன்?. ஆத்மா சரீரத்துக்கு ஹிதசிந்தைபண்ணுமதொழிய, சரீரம் ஸ்வரக்ஷணத்தைப்பண்ண என்பதொன்றுண்டோ? ஆகாரமாய் நியாந்தாவாய் சேஷியாயிருக்கிற நீயொழிய, ஆதேயமாய் நியாம்யமாய் சேஷமான இது ஸ்வரக்ஷணத்தைப் பண்ணவோ? ஆதாராதேய நியந்த்ருநியாம்ய பாவங்களாலே சரீரலக்ஷணம் இதுக்கு உண்டான பின்பு, அஸ்பஷ்டமும் "நீயே கடவாய்" என்கிற ப்ரதிபத்திக்குக்கண்டவித்தனையன்றி ஸாதநாநுஷ்டாநம் பண்ணக்கண்டதோ?

**எங்குவந்துறுகோ? என்னையாள்வானே! ஏழுலகங்களும்நீயே ***
**அங்கவர்க்கமைத்ததெய்வமும்நீயே அவற்றவைகருமமும்நீயே ***
**பொங்கியபுறம்பால்பொருளுளவேலும் அவையுமோ நீயின்னேயானால் ***
**மங்கியவருவாம்நேர்ப்பமும்நீயே வான்புலனிறந்ததும்நீயே. (6)**

ஒ.—ஆறும்பாட்டில், கீழ்ப்பாட்டில் சொன்னபொருளை விஸ்தரிக்கிறார். [என்னையென்று தொடங்கி] - என்னையாளுகிறவனே! ஸர்வலோகமும் நீயிட்டவழக்காம்படி யிருந்தவனே! [அங்கவர்க்கென்று தொடங்கி]- அந்தலோகங்களிலுள்ளார்க்குச் சமைத்த தைவமும் அவற்றினுடைய ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரங்களும் அவற்றுக்குப்புறம்பு விஸ்த்ருதமான மஹதாதிகளும் நீயிட்டவழக்கு. [இன்னேயானால்] - இங்ஙனேயானால். [மங்கியென்று தொடங்கி] - கார்யாகாரமழிந்து காரணாவஸ்த்தமான ஸூக்ஷ்மப்ரக்ருதியும் அத்தையும் கூட வ்யாபிக்கவல்ல புருஷனும் நீயிட்டவழக்கு பத்தஜீவஸமஷ்டியும் முக்தாத்மாக்களுமென்றுமாம்.

இ.—ஆறும்பாட்டில், உக்தார்த்தத்தை விஸ்தரிக்கிறார். [எங்கு வந்து உறுகோ] - உன்னளவு எது? நான்கிற்கிற நிலை எது? நீ என்னைக் கிட்டுமதொழிய நான் ஸாதநாநுஷ்டாநம்பண்ணி வந்து

கிட்டவோ? [என்னையாள்வானே] - இவ்வளவு புகுரநிறுத்தினவனே! இவ்வளவு நான்வர நின்றேனுகிலன்றோ மேலும் எனக்கு பரமாவது? [ஏழுலகங்களும் நீயே] - ஸர்வலோகங்களும் நீயிட்டவழக்காம்படியிருக்கிறவனே! அபேக்ஷவர்த்திக்கிற என்னையொழிய விமுகராயிருப்பார்தானோ ஸ்வாதீநராயிருக்கிறார்கள்? அந்தலோகங்களிலுள்ளார்க்குச்சமைந்த தைவமும் நீயிட்டவழக்கு. அவர்களைக் குடிமை கொள்ளுகிற தேவர்களோ ஸ்வாதீநராயிருக்கிறார்கள்? அவற்றினுடைய ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரங்களும் நீயிட்டவழக்கன்றோ? [பொங்கியவித்யாதி] - ஒன்றுக்கொன்று விஸ்த்ருதமாய், அண்டத்துக்குப்புறம்பாய், அதுக்குக்காரணமான மஹதாதிகளென்று சிலவுண்டாகில், அவையும் உன் அதீநம். [மங்கியவித்யாதி]- காரயாகாரமழிந்து காரணுவஸ்த்தமாய், ஸூக்ஷ்மமான அவ்யக்தமும் நீயிட்டவழக்கு. [வான்புலனிறந்ததும் நீயே] - அவ்யக்தத்தையும் வ்யாபிக்கவற்றாய், அதீந்த்ரியமான காரணுவஸ்த் பத்தஸமஷ்டியும் நீயிட்டவழக்கு. [நீயின்னேயாறல்] - அர்த்தஸ்த்திதி இதுவானபின்பு எங்குவந்துறுகோ? ஆரேனுமாக, ஒருவன் தன்காரியம் தான் நிர்வஹித்துக்கொள்ளுமன்றன்றோ என்காரியம் எனக்குபரமாவது? என்றபடி. ''மங்கியவருவாம் நேர்ப்பமென்று - பத்தஸமஷ்டி'' என்றும், ''வான் புலனிறந்ததென்று - முக்தஸ்வரூபத்தையும் சொல்லுகிறது'' என்றும் பிள்ளான். அப்போது, அஸத்ஸமமாய் ஸூக்ஷ்மமான ஆத்மஸமஷ்டியென்றும், வான்புலனிறந்ததென்று வானிலேயாய் - பரமபதத்திலேயாய், அதீந்த்ரியமான முக்தஸ்வரூபமென்றும் நிர்வாஹம்.

௬௫.—ஆறும்பாட்டு. உக்தார்த்தத்தை விஸ்தரிக்கிறார்: - [எங்குவந்துறுகோ] - மேருசிகரத்திலே நிற்கிறுறொருவனை ஒரு பங்கு சென்றுகிட்டவோ! [என்னையாள்வானே]-இவ்வளவும் வரநின்றேன் நானுகிலன்றோ, மேலும் நான் வந்து கிட்டப்பார்ப்பது? [ஏழுலங்களும்நீயே] - ஸகலலோகங்களும் நீயிட்டவழக்காம்படி இருக்கிறவனே! அபேக்ஷவர்த்திக்கிறஎன்னையொழிய விமுகராயிருப்பார்தானோ ஸ்வாதீனராயிருக்கிறார்? [அங்கவர்க்கு அமைத்த தெய்வமும்நீயே] - அவர்களைக் குடிமைகொள்ளுகிற தேவதைகளும் நீயிட்டவழக்கு. [அவற்றவைகருமமும்நீயே] - அவ்வோ தேவதைகளுடைய ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரங்களோதான் அவர்கள்பக்கல் கிடக்கிறது? ஆக, இவ்வருத்துண்டான கார்யவர்க்கம் த்வததீநம் என்னுமிடஞ் சொல்லிற்று. [பொங்கிய இத்யாதி] - ஒன்றுக்கொன்று, விஸ்த்ருதமாய், அண்டத்துக்குப் புறம்பாய், அதுக்குக் காரணமான மஹதாதிகளென்று சிலவுண்டாகில், அவையும் உன் அதீநம். [மங்கிய இத்யாதி] - கார்யாகாரமடங்க அழிந்து ஸூக்ஷ்மாவஸ்த்தையைபஜித்திருக்கிற அவ்யக்தமும் நீயிட்டவழக்கு. [வான்புலனிறந்ததும்நீயே] - இவற்றின்படியன்றிக்கே, வானாய் - அவ்யக்தத்தையும்வ்யாபிக்கவற்றாய், சக்ஷுராதிகரணங்களுக்கு அவிஷயமாயிருக்குமுள்ள காரணமான ஜீவஸமஷ்டியும் நீயிட்டவழக்கு; பத்தாத்மஸ்வரூபமும் நீயிட்ட வழக்கென்கை. [இன்னேயாறல் - எங்குவந்துறுகோ] - அர்த்ததத்த்வம் இதுவானபின்பு, எங்கே வந்து கிட்டக்கடவேன்? ''மங்கியஅருவாம் நேர்ப்பமென்று - ''பத்தஸமஷ்டி'' என்றும், ''வான்புலனிறந்ததென்று - முக்தஸ்வரூபத்தைச் சொல்லுகிறது'' என்றும் பிள்ளான். அப்போது, அஸத்ஸமமாய் ஸூக்ஷ்மமான ஆத்மஸமஷ்டியென்றும், பரமபதத்திலேயாய் அதீந்த்ரியமான முக்தாத்மஸ்வரூபமென்றும் நிர்வாஹம். இத்தால் சொல்லிற்றாயிற்று என்? என்னில், - கார்யாவஸ்த்தையோடு காரணவத்ஸ்தையோடு முக்தனை அவஸ்த்தையோடு வாசியற உன்கை பார்த்திருக்கவேண்டின பின்பு, நான் என் கார்யத்துக்குக் கடவேனுகையென்று ஒரு பொருளுண்டோ?

**இறந்ததும்நீயேயெதிர்ந்ததும்நீயே நிகழ்வதோ நீயின்னேயாறல்***
**சிறந்தநின்தன்மையதுவிதுவுதுவென்று அறிவொன்றுஞ்சங்கிப்பன்**
**[வினையேன்***
**கறந்தபால்நெய்யே!நெய்யினின்சுவையே! கடலினுளமுதமே!* அமுதிற்**
**பிறந்தவின்சுவையே!சுவையதுபயனே! பின்னைதோள்மணந்தபேராயா! (7)**

ஒ.—ஏழாம்பாட்டில், ஜகத்தடைய உனக்குசேஷமாய், அதுக்குநீயே நிர்வாஹகனுமிருத்தி என்னும் இவ்வறிவொன்றுங் கொண்டு தரித்திருக்கிறநான், கர்மத்தாலே யிதுவும் பொய்யோ வென்று சங்கியாநின்றேன் என்கிறார். [இறந்ததென்றுதொடங்கி] - காலத்ரயவர்த்திபதார்த்தங்களும் நீயிட்டவழக்கு. இங்ஙனேயாகையாலே சேஷியாயிருக்கிறஉனக்கு சேஷம் ஸகலபதார்த்தங்களும். [கறந்தபால் நெய்யென்று மேலுக்கு] - பால் தொடக்கமாக ஒன்றுக்கொன்று விலக்ஷணமான பதார்த்தங்களை அவனுடைய போக்யதைக்கு ஸத்ருசமாகச் சொல்லி, அவன்படிக்கு அவையும் போராமையாலே அதுதன்னையே சொல்லுகிறார். [கறந்தபால்] - கறந்தபோதை ரஸத்தை நினைக்கிறது. [சுவையதுபயனே] - ரஸாநுபவத்தால் வந்த ஸுகம். இங்குப்பேசின போக்யதாப்ரகர்ஷ முண்டாயிருக்க, இவர்க்கு அப்போதே கிடையாமை அதிசங்காஹேது என்று கருத்து.

இ.—ஏழாம்பாட்டில், ஸகலபதார்த்தங்களும் உனக்கு ப்ரகாரதயாசேஷமாய், ப்ரகாரியானநீயே அவற்றுக்குநிர்வாஹகனென்னும் அறிவொன்றும்கொண்டு தரித்திருக்கிற நான், என்பாபத்தாலே அதிலும் அதிசங்கை பண்ணுகின்றேனென்கிறார். [இறந்தது இத்யாதி] - காலத்ரயத்திலும் வர்த்திக்கிற ஸகலபதார்த்தங்களும் நீயிட்டவழக்கு. தாந்தாமுள்ள காலத்தில் அவ்வோபதார்த்தங்களுக்கு சேஷிகளா யிருப்பாரில் வ்யாவ்ருத்தி. [சிறந்தநின்தன்மை அதுவிதுவுதுவென்று] - தூரஸ்த்தமாயும் ஸந்நிஹிதமாயும் அதூரவிப்ரக்ருஷ்டமாயுமிருக்கிற ஸகலபதார்த்தங்களும் சேஷித்வத்தாலே சிறந்திருந்துள்ள உன்னுடைய ப்ரகாரம். 'இன்னேயானால் - இறந்ததும்நீயே' என்னுதல். 'இன்னேயானால் - சிறந்தநின்தன்மை' என்னுதல் - தூரஸ்த்தமாயும், ஸந்நிஹிதமாயும், அதூரவிப்ரக்ருஷ்டமாயுமுள்ள பதார்த்தங்கள் உனக்கு ப்ரகாரமாயற்றல் காலத்ரயவர்த்தி ஸகலபதார்த்தங்களும் நீயிட்டவழக்கென்னுதல், காலத்ரயவர்த்தி ஸகலபதார்த்தங்களும் நீயிட்டவழக்காகையாலே ஸகலபதார்த்தங்களும் உனக்கு ப்ரகாரமென்னுதல். [அறிவொன்றும் சங்கிப்பன்] சரீரகதமான து:க்கம் ஆத்மாவுக்கானுப்போலே, எல்லாருடைய துக்கங்களும் ப்ரகாரியான உன்னதென்னும் ஸம்பந்தஜ்ஞானமொன்றையுமாயிற்று எனக்கு உஜ்ஜீவநஹேதுவாக நினைத் திருப்பது; அதொன்றிலும் அதிசங்கை பண்ணுகின்றேன். [வினையேன்] - கலக்கத்தாலே அதிசங்கை பண்ணுங்காட்டில் அவன்ஸ்வரூப மில்லையாகாதிறே; எனக்கு இப்புத்திபிறக்கைக்கடி என்பாபமிறே. கீழில் அதிசங்கைக்கும் இதுக்கும் நெடுவாசியுண்டு. ஆச்ரித பரதந்த்ரனென்கிற ஸ்வபாவத்திலே அதிசங்கைபண்ணினால், ஆச்ரயணத்திற்குறையாலே அங்கீகரித்திலனென்று நினைத்திருக்கலாம்; இதில் அவனுடைய ஸத்பாவத்திலே அதிசங்கைபண்ணுகிறதிறே. ஸர்வப்ரகாரியாய்க் கொண்டிறே அவனுடையஸத்தை. ஸ்வவ்யதிரிக்தங்கள் ப்ரகாரமாய்க்கொண்டிறே யுண்டாவது? இப்படிஸ்வருபத் திலே யதிசங்கை வர்த்திக்கைக்கடியென்? என்னில், அதிசங்காஹேது சொல்லுகிறது; [கறந்த பால் இத்யாதி] - வ்யதிரேகத்தில் ஜகத்துஉபஸம்ஹ்ருதமென்று நினைக்கவேண்டும்படியான உன்போக்யதா ப்ரகர்ஷம் அதிசங்காஹேது. [கறந்தபால்] - கறந்தபோதை ரஸத்தை நினைக்கிறது; கறவாதபாலில்லை யிறே; உபாதிவிசேஷங்களால் வந்த ரஸவிசேஷத்தை வ்யாவர்த்திக்கிறது. [நெய்யே] - அதில் ஸாராம்சம். [நெய்யி னின்சுவையே] - நெய்யின் இன்சுவையானவனே! மஹத்தத்த்வத்தைக்கலக்கி அதில் ஸாரமான அம்ருதமானவனே! [அமுதிற்பிறந்த இன்சுவையே] - அந்த அம்ருதத்திற்பிறந்த இனிய ரஸமானவனே! [சுவையதுபயனே] - ரஸாநுபவத்தால் வந்த ஸுகமானவனே! ஒன்றிலொன்று மேற்பட்ட ரஸங்களைச்சொல்லி, அவைபோராமையாலே தன்னையே சொல்லுகிறது. [பின்னைதோள் மணந்தபேராயா]- ஒருமிதுநாநுபவமாயிற்று இவர்க்குபோக்யம். ஸம்ஸாரியை ஆநந்திப்பிக்குமாபோலேயாயிற்று ஆநந்த மயனை அவனுகப்பிப்பது; இருவருடையவுஞ் சேர்த்தியழகாயிற்று இவர்க்குபோக்யம்.

ஈடு.—ஏழாம்பாட்டு. ஸகலபதார்த்தங்களும் உனக்கு ப்ரகாரதயா சேஷமாய், நீ ப்ரகாரி யாய், நீயே அவற்றுக்கு நிர்வாஹகனென்னும் அறிவொன்றுங்கொண்டு தரித்திருக்கிற நான் என் பாபத்தாலே அதிலும் அதிசங்கைபண்ணுகின்றேனென்கிறார்.

[இறந்தது இத்யாதி] - "இக்காலத்துக்கு நான் கடவேன், மற்றொருகாலத்துக்கு வேறே சிலர் கடவர்" என்றுதான் உன்னாலே சொல்லலாமோ? பூதகாலத்திலுள்ளாரோடு பவிஷ்யத் காலத்திலுள்ளாரோடு வர்த்தமானகாலத்திலுள்ளாரோடு வாசியற எல்லாரும் த்வததீநர்.

''இன்னேயாகுல் - எங்குவந்துறுகோ'' என்று கீழ்ப்பாட்டோடே அந்வயம். [சிறந்த நின்
தன்மை அதுவிதுவுதுவென்று] - ஸ்தூலஸ்த்தமாயும், ஸந்நிஹிதமாயும், அதூரவிப்ரக்ருஷ்டமாயு
முள்ள ஸகலபதார்த்தங்களும், சேஷித்வத்தாலே சிறந்திருந்துள்ள உன்னுடைய ப்ரகாரம்.
''இன்னேயாகுல் இறந்தும் நீயே''என்னுதல், ''சிறந்தநின் தன்மை'' என்னுதல்-இப்படி காலத்
ரயவர்த்தி பதார்த்தங்களும் நீ யிட்ட வழக்காகையாலே ஸகலபதார்த்தங்களும் உனக்கு ப்ரகார
மென்னுதல்; ஸ்தூலஸ்த்தமாயும் ஸந்நிஹிதமாயும் அதூரவிப்ரக்ருஷ்டமாயுமுள்ள பதார்த்தங்கள்
உனக்கு ப்ரகாரமாயற்ருல் காலத்ரயவர்த்தி பதார்த்தங்களும் நீயிட்டவழக்கென்னுதல். [என்ற
றிவொன்றும் சங்கிப்பன்] - தன்னையொழிந்ததடங்கலும் தனக்கு ப்ரகாரமாய்த் தான் ப்ரகாரி
யாயிருக்கையாலே, இவற்றுக்கு வந்தது தனக்கு வந்ததாக நினைத்திருப்பானொருவனென்கிற
அறிவாயிற்று, இவர்க்கு ஜீவிக்கைக்குஹேது; அதொன்றிலும் அதிசங்கைபண்ணுகின்றேன்,
அது எனக்குக் கார்யகரமல்லாமையாலே. [வினையேன்] - கலக்கத்தாலே அதிசங்கை பண்ணும்
காட்டில் அவன்ஸ்வரூப மில்லையாகாதிறே; எனக்கு இப்புத்தி பிறக்கைக்கடி என்பாபமிறே.
*சங்கே மத்பாக்யஸங்க்ஷயாத்*. கீழிலதிசங்கைக்கும் இதுக்கும் வெடுவாசியுண்டு. ஆச்ரிதபர
தந்த்ரனென்கிற ஸ்வபாவத்திலே அதிசங்கைபண்ணினால் ஆச்ரயணத்திற்குறையாலேயென்று
நினைத்திருக்கலாம்; இதில் அவனுடைய ஸத்பாவத்திலேயிறே அதிசங்கை. ப்ரகாரியாய்க்
கொண்டிறே அவனுடைய ஸத்தை; ஸ்வவ்யதிரிக்தங்கள் அவனுக்கு ப்ரகாரமாய்க் கொண்
டிறே உண்டாவது. இப்படி ஸ்வரூபத்தில் அதிசங்கை வர்த்திக்கைக்கு அடியென்? என்னில்:-
அதிசங்காஹேது சொல்லுகிறது; [கறந்தபால் இத்யாதி] - வ்யதிரேகத்தில் ஜகத்து உபஸம்
ஹ்ருதமென்று நினைக்கவேண்டும்படியான உன் போக்யதாப்ரகர்ஷம் அதிசங்காஹேது. [கறந்த
பால்] - கறந்தபோதை ரஸத்தை நினைக்கிறது; அல்லது கறவாதபாலில்லையிறே, உபாதி
விசேஷத்தால்வந்த ரஸவிசேஷத்தை வ்யாவர்த்திக்கிறது. [நெய்யே] - அதில் ஸாராம்சம்.
[நெய்யினின்சுவையே] - நெய்யில் இனிய சுவையானவனே! [கடலினுளமுதமே] - மஹாத்தத்
வத்தைக்கலக்கி அதில் ஸாராம்சமாக வாங்கின அம்ருதம் போலே போக்யனானவனே! [அமுதில்
பிறந்த இன்சுவையே] அதில் ரஸாம்சத்தைச்சொல்லுகிறது. [சுவையதுபயனே] - ரஸாநுபவ
ஸுகரூபமானவனே! ஒன்றிலொன்று மேற்பட்ட ரஸாம்சங்களைச்சொல்லி, அது போராமை
யாலே தன்னையே சொல்லுகிறது. [பின்னைதோள் மணந்தபேராயா] - ஒரு மிதுநாநுபவமா
யிற்று இவர்க்கு போக்யம். ஸம்ஸாரியை அவன் ஆநந்திப்பிக்குமாபோலேயாயிற்று, ஆநந்த
மயனை அவள் உகப்பிக்கும்படி. இருவருடைய சேர்த்தியழகாயிற்று இவர்க்கு போக்யம்.

**மணந்தபேராயா!மாயத்தால் முழுதும்வல்வினையேனையீர்கின்ற;***
**குணங்களையுடையாய்! அசுரர்வன்கையர்கூற்றமே! கொடியபுள்ளு**
**[யர்த்தாய்!***
**பணங்களாயிரமுடையபைந்நாகப்பள்ளியாய்! பாற்கடற்சேர்ப்பா!***
**வணங்குமாறறியேன் மனமும்வாசகமும்செய்கையும்யானும்நீதானே. (8)**

ஒ.—எட்டாம்பாட்டில், ஏதேனுஞ்செய்தாலும் நீரே யத்நம்பண்ணவேண்டாவோ? என்னில்,—
ஆத்மாத்மீயங்களடைய உன்னதாய், எனக்கென்ன ஒருஉபகரணமில்லாமையாலே என்னால் செய்யலாவ
தொன்றுமில்லை; ரக்ஷிக்கவல்லையுமாய் ரக்ஷணஸ்வபாவனுமான நீயே வந்து என்னை விஷயீகரித்தருள
வேணு மென்கிறார். [மணந்த என்றுதொடங்கி] - அத்யபிநிவிஷ்டனாய்க் கொண்டு நப்பின்னைப்
பிராட்டியுடைய திருத்தோள்களையணைந்த பேராயனே! ஒன்றொழியாமே எல்லாம் என்னையீரும்படியான
குணங்களையுடையவனே! இப்போது காணப்பெறாத இன்னாப்பாலே, 'வல்வினையேன்' என்கிறார். [அசுரர்
வன்கையர் கூற்றமே] - வன்கையரான அஸுரர்களுக்கு ம்ருத்யுவானவனே! [கொடிய புள்ளுயர்த்
தாய்] - கண்டதிசையிலே ப்ரதிபக்ஷத்தை மாய்க்கவல்ல பெரிய திருவடியைக் கொடியாகவுடையவனே!
[பணங்களென்று தொடங்கி] - உன்னோட்டை ஸ்பர்சத்தாலே விகஸிதமான ஆயிரம்பணங்களையும்
கண்வளரப்போரும்படி விஸ்தீர்ணமான உடம்பையுமுடைய திருவநந்தாழ்வானைப் படுக்கையாகக்
கொண்டு ரக்ஷ்யஜந்துக்களுக்கு அணித்தாகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிறவனே!

வைஷயிகஜ்ஞாநமும் ப்ராணனும் சரீரமும்மற்றுமுண்டான அபரிச்சேத்யமான ப்ரக்ருதிவிகாரங்களும், ப்ரக்ருதியும் அபுருஷார்த்தம் என்னும் அறிவையுடையேனும்படிபண்ணி, இவைபுருஷார்த்தமல்லாமை யைக்காட்டின மாத்ரமன்றிக்கே ஜ்ஞாநாநந்த ஸ்வரூபமான ஆத்மஸாக்ஷாத்கார பர்யந்தமாக என்னை நிர்வஹித்து அவ்வளவில் பர்யவஸியாதே என்னைச்சொல்லும் சொல்லாலே தன்னைச்சொல்லலாம்படி ஸ்வப்ரகாரதயா நான் தனக்கு அத்யந்தசேஷமென்னுமிடத்தையும் காட்டியருளினான்.

இ.—மூன்றும்பாட்டில், கேவலக்ருபையாலே ஸ்வவிஷயமாக இச்சையையும் பிறப்பித்து, என்னோடே ஸம்ச்லேஷித்து, ஸம்ச்லேஷஸ்த்தைர்யார்த்தமாக, விலக்ஷணமாய்த் தனக்கு அநர்ஹமுமான ஆத்மஸ்வரூபத்தையும் காட்டியருளினான் என்கிறார். [உணர்வி லும்பரொருவனை] - உணர்விலே உளரான நித்யஸித்தர் - ஜ்ஞாநாதிகரான நித்யஸூரிகளுடைய ஸத்தாதிகள் ஸ்வாதீநமாம்படி இருக்கிற அத்வி தீயனை. ப்ராப்யஸ்வரூபம் சொல்லிற்று. 'அயர்வறுமமரர்கள் அதிபதியாயிருக்கிற இருப்பிறே ப்ராப்யம். ''அடியார்கள் குழாங்களை - உடன்கூடுவ தென்றுகொலோ'' என்றிறே ப்ரார்த்தித்தது. [அவனதருளா லுறற்பொருட்டு] - அவனுடையப்ரஸாதத்தாலே பெறுகைக்காக. ''ப்ராப்யம் அவன்'' என்கிற நிர்ப்பந்தத் தோபாதி, ப்ராபகமும் அவன்ப்ரஸாதம் என்றிறே இவர் இருப்பது. ப்ராப்யமும் ப்ராபகமும் அவனேயாகில் நீர்வரநின்ற அம்சமேதென்னில்? — [என்னுணர்வினுள்ளே யிருத்தினேன்] - ''வைத்தேன் மதியால்'' என்றதுதானிறே. அவனை என்னுடைய ஜ்ஞாநத்துக்கு விஷயமாக்கினேன். இச்சித்தேனென்கை, இச்சைதான் ஸ்வாதீநமோ என்னில்? [அதுவுமவனதின்னருளே] - அந்த இச்சைதானும்பிறந்தது அவன் ப்ரஸாதத்தாலே. நின்றநின்ற வளவுகள்தோறும் ''இவ்வளவு அவனாலேபிறந்தது'' என்னும்படியா யிற்றிருப்பது அவனுடைய நிருபாதிகஸௌஹார்த்தம். ''தன்பொன்னடிக்கீழ் - இருத்தும் வியந்து'' என்று ப்ராப்ய ப்ராபகமவனே என்று ''அருத்தித்து'' என்றதிறே; அத்தையிறே இங்குச்சொல்லுகிறது இரண்டரைப் பாட்டுக்குமேல் - ஆத்மஸ்வரூப வைலக்ஷண்யத்தைக் காட்டித் தந்தானென்கிறது. [உணர்வும்] - வைஷயிகஜ்ஞாநமும். [உயிரும்] - பஞ்சவ்ருத்திப்ராணனும். [உடம்பும்] - சரீரமும். [மற்று லப்பிலனவும்] - மற்றும் அபரிச்சேத்யமான மஹதாதி ப்ரக்ருதி விகாரங்களும், ப்ரக்ருதியும். [பழுதேயா முணர்வைப் பெறவூர்ந்து]-இவை ஹேயமென்னுமறிவை நான் பெறும்படிநடத்தி; ''தேரூர்ந்து'' என்னுமா போலே. இவை அபுருஷார்த்தமென்னும் உணர்வுண்டு - மயர்வற்றமதி: அத்தை நான் உடையேனும்படி பண்ணி. [இறவேறி] - ப்ரக்ருதி ப்ராக்ருதங்கள் அபுருஷார்த்தமென்னுமளவேயன்றிக்கே முடியப்போய்: ஜ்ஞாநாநந்தஸ்வரூபனுய் நித்யனுய் ஸ்வதஸ்ஸுகியாயிருக்கிற வளவும்செல்ல அறிவித்து [யானுந்தானாய் ஒழிந்தானே] - அவ்வளவிலும் பர்யவஸியாதே என்னைச்சொல்லுஞ் சொல்லாலே தன்னைச் சொல்லலாம்படி தனக்கு ப்ரகாரதயா சேஷமென்னுமிடத்தைக் காட்டித்தந்தான். அஹம்புத்தியும் அஹம்சப்தமும் தன்னளவும் செல்லும்படி ப்ரகாரதைகவேஷமாயிருக்கிறபடியைக் காட்டித்தந்தான். தச்சப்தம் குணவிசிஷ்ட வாசியானவோபாதி த்வம் சப்தமும் அசித்விசிஷ்ட ஜீவாந்தர்யாமியாமளவும் காட்டக்கடவதிறே.

ஈடு.—மூன்றும்பாட்டு. கேவலக்ருபையாலே ஸ்வவிஷயமாக இச்சையையும் பிறப் பித்து, என்னோடே ஸம்ச்லேஷித்து, ஸம்ச்லேஷ ஸ்த்தைர்யார்த்தமாக விலக்ஷணமுமாய்த் தனக்கு அநர்ஹமுமான ஆத்மஸ்வரூபத்தையும் காட்டியருளினானென்கிறார்.

[உணர்விலும்பரொருவனை] உணர்விலேயுளரான நித்யஸித்தர்; ஜ்ஞாநாதிகரான நித்ய ஸூரிகளுடைய ஸத்தாதிகள் ஸ்வாதீநமாம்படியிருக்கிற அத்விதீயனை. இத்தால் - ப்ராப்ய ஸ்வரூபஞ்சொல்லிற்று. அயர்வறுமமரர்களதிபதியாயிருக்கு மிருப்பிறே ப்ராப்யம். ''அடியார் கள் குழாங்களை . உடன்கூடுவதென்றுகொலோ'' என்றிறே இவர் ப்ரார்த்தித்தது - [அவனதரு ளால்] அவனுடைய ப்ரஸாதத்தாலே. ப்ராப்யம் அவனே என்கிற நிர்ப்பந்தத்தோபாதி, ப்ரா பகமும் அவன்ப்ரஸாதமேயாயிருக்கிறபடி. [உறற்பொருட்டு] ப்ராபிக்கையின் பொருட்டு. ப்ராப்யப்ராபகம் அவனேயாகில், நீர் அதில் அந்வயித்த அம்சமேதென்ன; [என்னுணர் வினுள்ளேயிருத்தினேன்] அவனை என்னுடைய ஜ்ஞாநத்துக்கு விஷயமாக்கினேன். ''வைத் தேன் மதியால்'' என்றதுதானிறே. இச்சித்தேனென்கை. இச்சைதான் ஸ்வாதீநமோ வென்னில்,— [அதுவுமவனதின்னருளே] அந்த இச்சைதான் பிறந்ததும் அவன்ப்ரஸாதத்

தாலே நின்றநின்ற அளவுகள் தோறும் "இவ்வளவும் அவனாலே பிறந்தது" என்னும்படியா யிற்றிருப்பது அவனுடைய ஸௌஹார்த்தம், "தன்பொன்னடிகீழ்-இருத்தும் வியந்து" என்று ப்ராப்யமும் ப்ராபகமும் அவனேயென்று, "அருத்தித்து" என்றதிறே; அத்தையிறே இங்குச் சொல்லுகிறது. இரண்டரைப்பாட்டென்கிறது அற்றது. மேல் - ஆத்மஸ்வரூபவைலக்ஷண் யத்தைக் காட்டித் தந்தானென்கிறது—[உணர்வும்] வைஷயிகஜ்ஞாநமும். [உயிரும்] பஞ்ச வ்ருத்திப்ராணனும். [உடம்பும்] சரீரமும். [மற்றுலப்பிலனவும்] மற்றும் அபரிச்சேத்யமான மஹதாதிப்ரக்ருதிவிகாரங்களும், ப்ரக்ருதியும். [பழுதேயாமுணர்வைப் பெறவூர்ந்து]. இவை யெல்லாம், ஹேயமென்னும்படியான அறிவை நான் பெறும்படி நடத்தி; அக்வர்த்தப்ரயோஜ நத்தேர் ஊருமாப்போலே. இவை அபுருஷார்த்தமென்னுமுணர்வுண்டு - மயர்வற்றமதி; அத்தை நான் உடையேனும்படிபண்ணி. [இறவேறி] ப்ரக்ருதி ப்ராக்ருதங்கள் அபுருஷார்த் தங்களென்னுமளவேயன்றிக்கே முடியப்போய்; ஜ்ஞாநாநந்தஸ்வரூபமாய், பகவச்சேஷைகர ரஸமாயிருக்கும் ஆத்மவஸ்துவென்னுமளவும் காட்டித்தந்து. [இறவேறி] முடியவேற்றி. [யானும் தானுயொழிந்தானை] அவ்வளவிலும் பர்யவஸியாதே, என்னைச் சொல்லும்சொல்லாலே தன்னைச் சொல்லலாம்படி தனக்கு ப்ரகாரதயா சேஷமென்னுமிடத்தையும் காட்டித்தந்தான். 'ஆழ்வீர்!' என்றால், 'ஏன்', என்பான் ஈச்வரன்போலேகாணும். அஹம்சப்தமும் அஹம்புத் தியும் தன்னளவும் செல்லும்படி ப்ரகாரதைக வேஷமாயிருக்கிறபடியைக் காட்டித்தந்தான். தச்சப்தம் குணவிசிஷ்டவாசியானவோபாதி, த்வம்சப்தமும் அசித்விசிஷ்ட ஜீவாந்தர்யாமி யளவும் செல்லக்கடவதிறே.

**யானுந்தானுயொழிந்தானை யாதும்யவர்க்கும்முன்னோனை***
**தானும்சிவனும் பிரமனுமாகிப் பணைத்ததனிமுதலை***
**தேனும்பாலுங்கன்னலும் அமுதுமாகித்தித்தித்து*.என்**
**ஊனிலுயிரிலுணர்வினில் நின்றவொன்றையுணர்ந்தேனே. (4)**

ஒ.—நாலாம்பாட்டில், இவ்வாத்மா தனக்கு அத்யந்த போக்யமென்னுமிடத்தையும் காட்டித் தந்தருளினானென்கிறார். [யானும்என்று தொடங்கி] - சேதநாசேதநங்களுக்குக் காரணமுமாய், விபூத்யந்தர்ப்பூதனானதானும் ப்ரஹ்மாவும் ருத்ரன்தொடக்கமானகாரியவர்க்கத்துக்கும் காரணமான வனை. [தேனும் பாலும் என்று மேலுக்கு] - நிரதிசயபோக்யமாய் என்னுடைய சரீரத்திலும் ப்ராண னிலும் ஜ்ஞாநத்திலும் வ்யாப்தமாய் நின்ற விலக்ஷணமான ஆத்மாவைத் தனக்கு சேஷமாகவுடை யவனை யறியப்பெற்றேன். "யாதும் யவர்க்கும் முன்னோனை, தானும் சிவனும் பிரமனுமாகிப்பணைத்த தனிமுதலை, தேனும்பாலும் கன்னலுமமுதுமாகித்தித்தித்து - என் ஊனில் உயிரில் உணர்வினில் நின்ற ஒன்றனை யானுந்தானும் ஒழிந்தானை - உணர்ந்தேன்" என்றந்வயம். இருந்ததேகுடியாக ஸர்வசேத நரையும் விசேஷித்து அவர்களில் ப்ரதாநரான ப்ரஹ்ம ருத்ராதிகளையும் தன்னுடைய திவ்யஸங்கல்பத் தாலும் தன்னுடைய திவ்யாவதாரங்களாலும் அவர்களுடைய இச்சாதிகளுக்கு அநுகுணமாக ப்ராக்ருத மான ஐச்வர்யதாரதம்யத்தைக் கொடுத்து நடத்துகிறவன். அங்ஙனன்றிக்கே, என்னை யொருவனையும் விசேஷித்து முற்றூட்டாகக்கைக்கொண்டு, ஆத்மஸ்வரூபாநுகுணமாக ப்ராக்ருதமான சப்தாதிவிஷயாநு பவம் ஹேயமென்னுமிடத்தையும், ஆத்மஸ்வரூபம் பரதந்த்ரமென்னுமிடத்தையும், ஆத்மா நிரதிசய போக்ய மென்னுமிடத்தையும் அறிவித்தார் என்று இவ்விரண்டு பாட்டுக்கும் கருத்து. நின்றனிருந் தனித்தபோலே இஸ்ஸாமாநாதிகரண்யத்துக்கு விசேஷணும்சமான போக்யதையிலே தாத்பர்யம். கீழ் - ஆத்மா பகவத்சேஷத்வபர்யந்தமாக அநுஸந்திக்கப்பட்டது. இனிமேல் ஆத்மமாத்ரம் அநுஸந்திக்கப் படுகிறது.

இ.—ஐந்தாம்பாட்டில், ப்ராப்தியைக் காட்டினவளவேயன்றியே இவ்வாத்மா தனக்கு அத்யந்த போக்ய மென்னுமிடத்தையுங் காட்டினானென்கிறார். [யானும் தானுயொழிந்தானை] - கீழ்ச்சொன்ன அநந் யார்ஹசேஷத்வத்தில் ப்ரீதியாலே யநுபாஷிக்கிறார். [யாது மித்யாதி] - காரணவஸ்த்தமான ஸகலசேதநா

சேதநங்களுக்கும் காரணமானவனை. நியதபூர்வக்ஷணவர்த்தியிறே காரணமாவது. ப்ரஹ்மருத்ரர்கள் நடுவே அவதரித்து, தானும் ப்ரஹ்மருத்ரர்களும் தொடக்கமான கார்யவர்க்கமாய்க்கொண்டு விஸ்த்ருதமான அத்விதீயகாரணமானவனை: நாமரூபங்களிழந்து சக்த்யவஸ்த்த ப்ரபைபோல ஸ்வஸ்வரூபத்திலே அந்தர்க்கதமான சேதநாசேதநங்களை ஸ்ருஷ்டிகாலம் வந்தவாறே தன்பக்கலினின்றும் ப்ரதாந புருஷாவஸ்த்தையையுண்டாக்கி மஹதாத்யண்ட ஸ்ருஷ்டிபர்யந்தமாக ஸ்வேநரூபேண ஸ்ருஷ்டித்தும், அண்டாந்தர்ப்பூத பதார்த்தங்களுடைய ஸ்ருஷ்டி ஸம்ஹாரார்த்தமாக ப்ரஹ்மருத்ரர்களை ஸ்ருஷ்டித்தும் பாலநார்த்தமாக ப்ரஹ்மருத்ர ஸஜாதீயனுய்வந்து அவதரித்தவனென்கை. [தேனும் இத்யாதி] - ''ஸர்வரஸ:'' என்று சேதநனுக்கு அவன் இனிதாயிருக்குமாபோலே அவனுக்கும் இவன் போக்யனுயிருக்கை. ''அவனுக்கு போக்யம்'' என்னுமாகாரத்தாலேயிறே, ஸ்வஸ்வரூபம் இவனுக்கு இனிதாவது. [என்னுனில் இத்யாதி] - என்சரீரத்திலும் ப்ராணனிலும், ஜ்ஞாநத்திலும், வ்யாப்தமான விலக்ஷணமான ஆத்மாவைத் தனக்கு சரீரமாகவுடையவனை யறியப்பெற்றேன். ''நின்றவொன்று'' என்கிற ஆத்மஸ்வரூபவாசியான சப்தம், ஆச்ரயமான ப்ரகாரிபர்யந்தாபிதாநம் பண்ணுகிறது ஸ்வநிஷ்ட்டமல்லாமையாலே பகவத்பர்யந்தமாயிறே யிருப்பது. ஆத்மாவினுடைய போக்யதையாகில் சொல்லுகிறது, காரணத்வம் சொல்லுகிறதென் என்னில்? விமுகரானவர்களை கர்மாநுகுணமாக ஸ்ருஷ்டித்துவிட்டான். ஐச்வர்யகாமரான ப்ரஹ்மருத்ராதிகளுக்கு ஐச்வர்யங்களைக்கொடுத்து அதிகாரங்களை நடத்திக் கொடுத்தான் ; என்னளவில் இவ்வாத்மா தனக்கு அநந்யார்ஹமாய் போக்யமாயிருக்கிறபடியைக் காட்டித்தந்தானென்கிருர். நின்றனர் இருந்தனரிற்போலே இஸ்ஸாமாநாதிகரண்யத்துக்கு விசேஷணும்சமான போக்யதையிலே தாத்பர்யம். வையதிகரண்யத்துக்கும் நாட்டார் சொல்லுகிற சுத்தபேதமன்று பொருள் ; ஸாமாநாதிகரண்யத்துக்கும் ஸ்வரூபைக்யமன்று பொருள்: 'யாதும்யவர்க்கும் முன்னேனை' என்று தொடங்கி என்னுனிலுயிரிலுணர்வினில் நின்றவொன்ருன - யானும் தானுயொழிந்தானை உணர்ந்தேன்' என்றந்வயம்.

ருடு.—நாலாம்பாட்டு. ப்ராப்தியைக் காட்டினவளவேயன்றியே இவ்வாத்மா தனக்கு அத்யந்தபோக்யமென்னுமிடத்தையும் காட்டித்தந்தா னென்கிருர்.

* [யானும் தானுயொழிந்தானை] கீழ்ச்சொன்ன அநந்யார்ஹசேஷத்வத்தில் ப்ரீதியாலே அநுபாஷிக்கிருர். [யாதும் இத்யாதி] யாதும்யவர்க்குமென்று காரணவஸ்த்தமான சேதநாசேதநங்களைச் சொல்லுகிறது. [முன்னேனை] கார்யத்துக்கு நியமேந பூர்வக்ஷணவர்த்தியானவிறே காரணமாவது. [தானும்இத்யாதி] ப்ரஹ்மருத்ரர்கள் நடுவே அவதரித்த தானும் ப்ரஹ்மருத்ரர்கள் முதலான கார்யவர்க்கமுமாய்க் கொண்டு விஸ்த்ருதமான அத்விதீயகாரணமானவனை, சேதநாசேதநங்களடங்க அழிந்தபோது தன் திருமேனியிலே சக்த்யவஸ்த்தப்ரபைபோலே ஸூக்ஷ்மரூபேண இவை கிடக்கும்படி யேறிட்டுக்கொண்டுநோக்கி, ஸ்ருஷ்டிகாலம் வந்தவாறே தன்பக்கலினின்றும் விபக்தமாக்கி, அண்டஸ்ருஷ்டியளவும் தானே நடத்தி. அண்டாந்தர்வர்த்திகளில் ப்ரதாநரான ப்ரஹ்மாதிகளை உண்டாக்கி, ஸ்வேநரூபேண நின்று பாலநகர்மத்தைப் பண்ணியும், ப்ரஹ்மருத்ரர்களுடைய சரீரத்தையும் ஆத்மாவையும் அதிஷ்ட்டித்துக்கொண்டுநின்று ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களைப்பண்ணியும், அவர்கள் செய்கிற கார்யங்களோடு தான் செய்கிற கார்யங்களோடு வாசியற எல்லாம் தானே நடத்துகிறவனை. [தேனும்] இப்படி இனிதாயிருக்கிறது ஆர்க்கு? என்னில் *ஸர்வரஸ:* என்று சேதநனுக்கு அவன் இனியனுயிருக்குமாபோலே ஈச்வரனுக்கும் இது இனிதாயிருக்குமிறே. அவனுக்கு ''என்னது'' என்று இனிதாயிருக்கும்; இவனுக்கு ''அவனது'' என்று இனிதாயிருக்கும். ''ஈச்வரபரதந்த்ரன்'' என்று அறிவதற்கு முன்னும், ''ஸ்வாநுபவம் அமையும்'' என்னும்படி இனிதாயிருக்கிறதிறே, [என்னுனில் இத்யாதி] என்சரீரத்திலும், ப்ராணனிலும், ஜ்ஞாநத்திலும் வ்யாப்தமாய் விலக்ஷணமான ஆத்மாவைத் தனக்கு சரீரமாகவுடையவனை அறியப்பெற்றேன். ''நின்றவொன்று'' என்கிறது ஜீவாத்மஸ்வரூபவாசியான சப்தம்; ஆச்ரயமான ப்ரகாரிபர்யந்தாபிதாநம் பண்ணுகிறது. ஸ்வநிஷ்ட்டமல்லாமையாலே பகவத்பர்யந்தமாயிறேயிருப்பது. ஆத்மாவினுடைய போக்யதையாகிற் சொல்லுகிறது, காரணத்வம் சொல்லுகிறதென்? என்னில், விமுகரான சேதநரைக் கர்மாநுகுணமாக ஸ்ருஷ்டித்து விட்டான் ; ஐச்வர்யகாமரான ப்ரஹ்மாதிகளுக்கு அவர்களுகந்த ஐச்வர்யத்தைக் கொடுத்துவிட்டான் ; எனக்கு,

அசிதம்சம் த்யாஜ்ய மென்னு மிடத்தையும், ஐச்வர்யம் அபுருஷார்த்தமென்னுமிடத்தையும் ஆத்மவஸ்து தனக்கு அநந்யார்ஹசேஷமாய் நிரதிசயபோக்யமாயிருக்குமென்னுமிடத்தையும் காட்டித் தந்தானென்கைக்காகச் சொல்லுகிறார். நின்றனனிருந்தனனிற்போலே, இஸ்ஸாமாநாதி கரண்யத்துக்கு விசேஷணும்சமான போக்யதையிலே தாத்பர்யம். வையதிகரண்யத்துக்கும், நாட்டார் சொல்லுகிற சுத்தபேதமன்று பொருள்; ஸாமாநாதிகரண்யத்துக்கும், ஸ்வரூபைக்ய மன்று பொருள். 'யாதும் யவர்க்கும் முன்னோனே' என்று தொடங்கி 'என்னுனி யுயிரிலுணர்வினில் நின்றவொன்றுன யானும் தானுயொழிந்தானே உணர்ந்தேன்' என்றக்வயம்.

நின்றவொன்றையுணர்ந்தேனுக்கு அதனுள்நேர்மையதுவிதுவென்று*
ஒன்றுமொருவர்க்குணரலாகாது உணர்ந்துமேலுங்காண்பரிது*
சென்றுசென்றுபரம்பரமாய் யாதுமின்றித்தேய்ந்தற்று*
நன்றுதீதென்றறிவரிதாய் நன்ருய்ஞானங்கடந்ததே. (5)

ஒ.—அஞ்சாம்பாட்டில், நான் பகவத்ப்ரஸாதத்தாலே அறிந்த இவ்வாத்மவஸ்து ஒருவர்க்கும் அறியப்போகிறதன்று; அறிந்தாலும் ஸாக்ஷாத்கரிக்கப் போகிறதன்று என்கிறார். [நின்றவென்று தொடங்கி] - தேஹேந்த்ரியாதிகளுக்கு ஸ்வாமியாய் நின்ற விலக்ஷணமான ஆத்மாவை ஆராய்ந்தேனுக்கு அதினுடைய வைலக்ஷண்யம் ஒரு ப்ரகாரத்தைச் சொல்லி 'இப்படியிருந்தது' என்று எத்தனையேனும் அறிவுடையார்க்கும் ஒன்றும் அறியவொண்ணுது; அறிந்தால் பின்னை ஸாக்ஷாத்கரிக்க வொண்ணுது. [சென்றென்று தொடங்கி] - போய்ப் போய் ஒன்றுக்கொன்று மேலாயிருக்கிற அன்னமயாதிகளுக்குப் பரனும் ப்ரக்ருதியின் தன்மை ஒன்றுமில்லாதபடி அத்தோடு அறவற்று ப்ராக்ருதமானபடியால் நன்றென்றும் தீதென்றும் அறியவொண்ணுதே அறவிலக்ஷணமாய் இந்த்ரியஜ்ஞானத்துக்கு எட்டாதிருக்கும்; இப்பாட்டில்-ஸாங்க்யத்தில் தத்த்வ ஸங்க்யாநக்ரமத்தாலே ஆத்மஸ்வரூபத்தைச் சொல்லும்படியைச் சொல்லிற்று.

இ.—அஞ்சாம்பாட்டில், கீழ், பகவத்ப்ரகாரமாக ஆத்மா அநுஸந்திக்கப்பட்டது; இதுக்குமேல் நாலுபாட்டு — படகதமான சௌக்ல்யத்தை நிஷ்கர்ஷக சப்தத்தாலே பிரித்துச் சொல்லுமாபோலே, ஆத்மஸ்வரூபாகாரத்தை அநுஸந்திக்கிறார். இதில் முதற்பாட்டு - பகவத்ப்ரஸாதத்தாலே நான் அறிந்த இவ்வாத்மவஸ்து ஒருவர்க்கும் அறியப்போகிறதன்று; அதுஅறிந்தாலும் ஸாக்ஷாத்கரிக்கப்போகிறதன்று என்கிறார். [நின்றவொன்றை] - தேஹேந்த்ரிய மந ப்ராணதிக்களிற் காட்டில் அந்யமாய், இவையழியுமன்றும் அழியாதே ஏகரூபமாய், இவற்றுக்கு நியந்தாவுமாய், விலக்ஷணமுமான ஆத்மாவை- [உணர்ந்தேனுக்கு] - "உயர்வற உயர்நலமுடையவன்" என்று அவன்கல்யாணகுணங்களிலே இழிந்தவராகையாலே இதுக்குமுன்பு மின்மினிபோலே யிருக்கிற ஆத்மஸ்ருபத்தில் கைவைத்திலர்; பரிகரமும் பக்திருபாபந்நஜ்ஞாநமாகையாலே இத்தை யநுஸந்திக்கப் போதுபெற்றிலர். முக்தன், "நோபஜநம்ஸ்மரந் பண்ணுமாபோலேயிறே பகவத்ப்ரவணனுக்கும் ஆத்மஜ்ஞாநம் அவிஷயமாயிருதபடிஇத்தை யாராய்ந்தவாறே இருந்தபடியென்? [அதனுள் நேர்மை] - அதினுடைய வைலக்ஷண்யம். [அதுஇதுஎன்று] - அநுபூதங்களின்படி யென்றுதல், அநுபவிக்கிறவத்தின்படி யென்றுதல் அறிபப்போகாது. [ஒன்றுமொருவர்க்கும் உணரலாகாது] - எத்தனையேனும் அதிசயிதஜ்ஞாநர்க்கும் ஏகதேசமும் அறியப்போகாது; "க்லேசோதிகதரஸ்தேஷாமவ்யக்தாஸக்தசேதஸாம்". [உணர்ந்து மேலும் காண்பரிது] - வருந்தியறிந்தாலும் ஸாக்ஷாத்கரிக்கவொண்ணுது. [சென்று சென்று பரம்பரமாய்] - போய்ப் போய் ஒன்றுக்கொன்று மேலாயிருக்கிற அந்நமயாதிகளுக்குப்பரமாய். [யாதுமின்றித் தேய்ந்தற்று] - அவற்றின் ஸ்வபாவமொன்றும் தட்டாதபடி அவற்றோடு அறத்தொற்றற்று. [நன்று தீதென்று அறிவரிதாய்] - தேஹம், தேஹத்தைக்காட்டில் இந்த்ரியம், அதிற்காட்டில் மநஸ்ஸு, அதிற்காட்டில் ப்ராணன், அதிற்காட்டில் புத்தி என்கிறதில் வைலக்ஷண்யம் உண்டாகிறுப்போலே ப்ராக்ருதங்களில் உண்டான நன்மை தீமைகள் சொல்லவொண்ணுதிருக்கை. [நன்ருய்] - இவற்றிற்காட்டில் அதிவிலக்ஷணமாய். [ஞானங்கடந்ததே] - ஐந்த்ரியஜ்ஞாநத்துக்கு எட்டாதிருக்கும். கீழில், அவை ஒன்றுக்கொன்று நெடுவாசியுண்டா யிருக்கச்செய்தேயும் ஏகப்ரமாண

கம்யத்வ ஸாம்யமுண்டு: அதுவுமில்லையென்கிறது, இப்பாட்டில். ஸாங்க்யத்தில் தத்வஸங்க்யாநக்ரமத்தாலே ஆத்மஸ்வரூபம் சொல்லும்படியைச் சொல்லிற்று.

௫.—அஞ்சாம்பாட்டு. "ஈற் பகவத்ப்ரகாரமாக ஆத்மா அநுஸந்திக்கப்பட்டது; இதுக்கு மேல் நாலுபாட்டு படகதமான சௌக்ல்யத்தைப் பிரித்து நிஷ்கர்ஷக சப்தத்தை யிட்டு வ்யவஹரிக்குமாபோலே, 'எம்பெம்மானோடு' என்கிற பாட்டளவும் கேவல ஆத்ம ஸ்வரூபத்தைச் சொல்லுகிறது" என்று எம்பார் அருளிச்செய்யும்படி. ஆண்டான், "ப்ரகார மான வேஷத்திலே சொல்லுகிறது" என்னும். "நின்றவொன்றை" என்கிறவிதில் பகவத்ப்ரஸாதத்தாலே நான் அறிந்த இவ்வாத்மவஸ்து ஒருவர்க்கும் அறியப்போகாது, வருந்தி யறிந்தாலும் ஸாக்ஷாத்கரிக்கப்போகிறதன்றென்கிறார்.

[நின்றவொன்றை] தேஹேந்த்ரியமந:ப்ராணநீக்களிற்காட்டில் அந்யமாய், இவை அழியுமன்றும் அழியாதே, ஏகரூபமாய், இவற்றுக்கு நியந்தாவுமாய், விலக்ஷணமுமான ஆத்மாவை. [உணர்ந்தேனுக்கு] ஆராய்ந்தேனுக்கு, "உயர்வறவுயர்நலம்" என்று அவ னுடைய கல்யாணகுணங்களிலே இழிந்தவராகையாலே இதுக்குமுன்பு மின்மினி போலே யிருக்கிற ஆத்மஸ்வரூபத்தில் கண்வைத்திலர்; பரிகரமும் பக்திரூபாபந்நஜ்ஞாந மாகையாலே இத்தை யநுஸந்திக்கைக்குப் போதுபெற்றிலர், (முக்தன், *நோபஜநம் ஸ்மரந்* பண்ணுமாப் போலே யிறே, பகவத்குணப்ரவணனுக்கும் ஆத்மஜ்ஞாநம் அவிஷயமாயிருக்கும்படி). இத்தை ஆராய்ந்தேனுக்கு இது இருந்தபடியென்? என்கிறார்:— [அதனுள்நேர்மை] அதினுடைய வைலக்ஷண்யம். [அதுவிதுவென்று] அநுபூதங்களின் படி என்றுதல், அநுபவிக்கிறவற்றின்படி என்றுதல் அறியப்போகாது. [ஒன்றுமொருவர்க்கு உணரலாகாது] (ஒருவர்க்கு-ஒன்றும்-உணர லாகாது) எத்தனையேனும் அதிசயதஜ்ஞாநர்க்கும் ஏகதேசமும் அறியப்போகாது. [உணர்ந்து மேலும் காண்பரிது] *ஜ்ஞாதும் த்ரஷ்டுஞ்ச தத்த்வேந* என்கிறபடியே அறியப்போகாது, அறிந்தால் பின்னை ஸாக்ஷாத்கரிக்கவும் போகாது. [சென்று சென்று பரம்பரமாய்] போய்ப் போய் ஒன்றுக்கொன்று மேலாயிருக்கிற அந்நமய ப்ராணமய மநோமயங்களுக்கு அவ்வருகாய். [யாதுமின்றித்தேய்ந்தற்று] அவற்றின் ஸ்வபாவங்கள் ஒன்று மின்றிக்கே அவற்றோடறத் தேய்ந்தற்று. [நன்றுதீதென்று அறிவரிதாய்] தேஹம், தேஹத்திற்காட்டில் இந்த்ரியம், அதிற் காட்டில் மநஸ்ஸு, அதிற்காட்டில் ப்ராணன் என்று ஒன்றுக்கொன்று வைலக்ஷண்யமுண்டா இறுப்போலே, ப்ராக்ருதங்களின்படியால் நன்றென்றும் தீதென்றும் அறியவரிதாயிருக்கும். [நன்றாய்] ஸ்வதோவ்யாவ்ருத்தமாய் [ஞானங்கடந்ததே] ஐந்த்ரியகஜ்ஞாநத்துக்கு எட்டாதிருக் கும். கீழிவை ஒன்றுக்கொன்று நெடுவாசியாயிருக்கச் செய்தேயும் ஏகப்ரமாண கம்யத்வ ஸாம்யமுண்டு; அதுவுமில்லையென்கிறது. ஆக, இப்பாட்டில்—ஸாங்க்யத்தில் தத்த்வ ஸங்க்யாநக்ரமத்தாலே ஆத்மஸ்வரூபத்தைச் சொல்லும்படியையும், அது தன்னை அறிகை யிலுண்டான அருமையையுஞ் சொல்லிற்று.

நன்றாய்ஞானங்கடந்துபோய் நல்லிந்திரியமெல்லாமீர்த்து*
ஒன்றாய்க்கிடந்தவரும்பெரும்பாழ் உலப்பிலதனையுணர்ந்துணர்ந்து*
சென்றாங்கின்பத்துன்பங்கள் செற்றுக்களைந்துபசையற்றால்*
அன்றேயப்போதேவீடு அதுவேவீடுவீடாமே. (6)

௬.—ஆறும்பாட்டில், யோகசாஸ்த்ரத்தில் ஆத்மஸ்வரூபப்ராப்த்யுபாயமாகச் சொல்லுகிற இந்த்ரியஜயாதிரூபமான யோகத்தாலே ப்ரக்ருதிவிநிர்முக்த ஆத்மஸ்வரூபத்தை துக்கேநப்ராபிக்கலா மென்கிறார், [நன்றாய் ஞானங்கடந்து] - அநுபாஷணம். அதவா [ஞானங்கடந்துபோய் நல்லிந்திரிய மெல்லாம் ஈர்த்துஒன்றாய்க்கிடந்த அரும்பெரும்பாழ் உலப்பிலதனை, உணர்ந்துணர்ந்து - நன்றாய் - சென்று] - சக்ஷுராதிகரணங்களுக்கு விஷயமான சப்தாதி விஷயங்களில் அகப்படாதே தப்பிப்போய்

போனாலும் அவையிருந்த இடமேற இழுக்கக்கடவதாய் மிகவும் பலவத்தான இந்த்ரியகணத்தையும் வென்று ஆத்மாவோடு அநாதியாக விவேகிக்கவொண்ணாதபடி ஸம்ஸ்ருஷ்டமாய் துஸ்தரமாய் மஹதாதி விகாரங்களாலும் ஸ்வரூபத்தாலும் பெரும்பரப்பாய் நித்யமான ப்ரக்ருதிதத்த்வத்தை மிகவும் உணர்ந்து அதில் அவகாஹநமின்றிக்கே சுத்தமாய்ப்போய் அதினுடைய லாபாலாபநிமித்தமான ஸுகது:க்கங்களையும் அற விட்டு அவற்றிலுண்டான ருசிவாஸநைகளும் போனால். [அன்றே அப்பொதே வீடு, அதுவேவீடு]. அன்றே அப்போதே ப்ரக்ருதி தொற்றுஅறும்; அதுவே ஆத்மப்ராப்தியாவது. [வீடாமே] - இதுவும் புருஷார்த்தமாக இச்சிப்பார்க்குப் புருஷார்த்தமாம்.

இ.—ஆறாம்பாட்டில், யோகசாஸ்த்ரத்தில் இந்த்ரியஜயாதிரூபமானயோகத்தாலே ப்ரக்ருதி விநிர்முக்த ஆத்மஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரிக்கலாமென்கிறார். [நன்றாய் ஞானங்கடந்துபோய்] - அநுபாஷணமென்றுதல். "நன்றாய்" என்கிற இதுகிடக்க; சப்தாதிவிஷயங்களை ஜ்ஞாநசப்தத்தாலே சொல்லுகிறது. [நல்லிந்திரியமெல்லாம் ஈர்த்து] - தப்பிப்போனாலும் அவையிருந்தவிடத்தே இழுக்கக்கடவ ப்ரபலமான இந்த்ரியகணத்தையும் வென்று. [ஒன்றாய்க் கிடந்த] - ஆத்மாவோடு சேர்ந்து விவேகிக்க வொண்ணாதபடி ஸம்ஸ்ருஷ்டமாய். [அரும்பெரும் பாழ்] - "மம மாயா துரத்யயா" என்கிற படியே துஸ்தரமாய் மஹதாதிவிகாரங்களாலும் காரணமான அவ்யக்தஸ்வரூபத்தாலும் பெரும்பரப்பை யுடைத்தாய் போகமோக்ஷங்களை விளைத்துக்கொள்ளுகைக்கு யோக்யமாய். [உலப்பிலதனை உணர்ந் துணர்ந்து] நித்யமான ப்ரக்ருதிதத்த்வத்தை மிகவுமுணர்ந்து. [நன்றாய் சென்று] - ப்ரக்ருதிப்ராக்ருதங்களில் கால்தாழாதே சுத்தனாய்ச்சென்று. [ஆங்கு] - ஆத்மஸ்வரூபத்திலே. [இன்பத்துன்பம் இத்யாதி] - ப்ராக்ருதங்களை த்யாஜ்யமென்று விட்டாலும், ஸுகது:க்க ஹேதுவான புண்யபாபங் கிடக்குமாகில், அவை கொடுவந்து கூட்டுமிறே; புண்யபாப ஹேதுவான லாபாலாபங்களைப் பற்றிவரும் ஸுகது:க்கங்களைவிட்டு. [பசையற்றால்] - அவற்றைவிட்டாலும் ருசிவாஸநைகள் கிடக்குமாகில் பின்னையும் கர்ப்பிக்கும்; அந்த ருசிவாஸநைகளும் போனால். [அன்றே இத்யாதி] அம்முஹூர்த்தத்திலே ப்ரக்ருதி ப்ராக்ருதங்களில் தொற்றறும். ப்ரக்ருதியின்தனை ஜோதுமார்பமுடையாரில்லை. தன்பக்கல் த்யாஜ்ய புத்திபண்ணினாரைத் தானும் முகப்பாராது. [அதுவேவீடு] "அற்றது பற்றெனில் உற்றதுவீடுயிர்" என்று ப்ராக்ருதங்களில் தொற்றுஅற்றவாறே ஆத்மப்ராப்திலக்ஷண மோக்ஷமாயிருக்கும். அதுக் கென்னச் செய்யவேண்டுவதொன்றில்லை. [வீடாமே] - இதுவும் ஒரு புருஷார்த்தமாம். ஸர்வேச்வரன ப்ராப்யனுமிடத்தில் அவனுக்கு ப்ரகாரமாய்க்கொண்டு ஆத்மாவும் ப்ராப்யமாகக் கடவதாகையாலே இதுவும் புருஷார்த்தமாமே என்கிறார். தம்முடைய உத்தேச்யத்தில் ஏகதேசத்தைப் புருஷார்த்தத்தில் சரமாவதியாக நினைக்கையாலேயிறே முன்பு இவர் இத்தைச் சிந்தித்திருந்தது.

ஈடு.—ஆறும்பாட்டு. யோகசாஸ்த்ரத்திற் சொல்லுகிறபடியே இந்த்ரிய ஜயாதிரூபமான யோகத்தாலே ப்ரக்ருதிவிநிர்முக்த ஆத்மஸ்வரூபத்தை நுக்கேக ஸாக்ஷாத்கரிக் கலாமென்கிறார்.

[நன்றாய் ஞானங்கடந்துபோய்] வ்யாவ்ருத்தமான நன்மையை யுடைத்தாய், இந்த்ரிய ஜ்ஞாநத்துக்கு அவிஷயமா யிருக்குமென்று அவற்றை அநுபாஷிக்கிறதென்னவுமாம். நன்றா யென்கிற இதுகிடக்க, சப்தாதி விஷயங்களைத் தப்பிப்போயென்னுதல், "ஜ்ஞாயத இதி ஜ்ஞாநம்" என்கிற ப்ரக்ரியையாலே-ஜ்ஞாநமென்கிறது. ஜ்ஞாநத்தால் காணப்படும் விஷயங் களை ஜ்ஞாநசப்தத்தாலே சொல்லுகிறது. [நல்லிந்திரிய மெல்லாமீர்த்து] விஷயங்களைத் தப்பிப் போனாலும், அவையிருந்தவிடங்களிலே கூட்டக்கடவதான ஸாமர்த்த்யத்தையுடைய இந்த்ரிய ங்களையும் ஜயித்து. [ஒன்றாய்க்கிடந்த இத்யாதி] அநாதிகாலம் சேதநனோடு ஸம்ஸ்ருஷ்டமாய்க் கிடப்பதாய், "மம மாயா துரத்யயா" என்கிறபடியே ஒருவரால் கடக்க அரிதாய், மஹதஹங் காராத்யவஸ்த்தைகளாலே பரப்பையுடைத்தாய், போகமோக்ஷங்களை விளைத்துக்கொள்ளலாம் படியாய், ப்ரவாஹ ரூபத்தாலும் ஸ்வரூபத்தாலும் நித்யமாயிருக்கிற அசித்தத்த்வத்தை; ப்ரக் ருதியை, கார்யங்களாயும் காரணங்களாயு மிருக்குமென்னுமிடத்தை மிகவுமுணர்ந்து. [ஆங்கு

நன்றாய்-சென்று] தன்பக்கல் போக்யதாபுத்தியைப் பிறப்பிக்கக் கடவதான இதில் கால்தாழமாதே, ஆத்மஸ்வரூபத்தளவும் சென்று. [இன்பந்துன்பம் இத்யாதி] அத்தைத் த்யாஜ்யமென்று விட்டாலும், ஸுக து:க்கங்களுக்கு ஹேதுவான புண்யபாபகர்மங்கள் கிடக்குமாகில் பின்னையும் கொண்டு மூட்டுமிறே; அவற்றையும் விட்டு. அவற்றை விட்டாலும் ருசிவாஸனைகள் கிடக்குமாகில் பின்னையும் கர்ப்பிக்கும். [பசையற்றால்] ருசிவாஸனைகளற்றால். [அன்றேயப்போதே] அக்காலத்திலே அம்முஹூர்த்தத்திலே. [வீடு] ப்ரக்ருதி ப்ராக்ருதங்களில் தொற்று அறும். ப்ரக்ருதியின் தன்னை சுனையும், ஸௌகுமார்யமுமுடையாரில்லை. தன்பக்கல் த்யாஜ்யபுத்தி பண்ணினுரைத் தானும் முகம்பாராது. [அதுவே வீடு] "அற்றது பற்றெனி லுற்றது வீடுயிர்" என்று ப்ராக்ருதங்களில் தொற்று அற்றவாறே ஆத்மப்ராப்திலக்ஷண மோக்ஷமாயிருக்கும். அதுக்கென்னச் செய்யவேண்டுவதில்லை. [வீடாமே] அவனுக்கு ப்ரகாரமாக ஆத்ம வஸ்துவை அநுஸந்தித்து, அவ்வழியாலே இதுதன்னை ப்ராப்யமாகவிறே இவர் தாம் நினைத்திருப்பது. அவ்வளவு போகமாட்டாதே இதின் நன்மையைக் கண்டு இவ்வளவிலே கால்தாழ்வார்க்கும் போந்திருந்ததீ! என்கிறார். தம்முடைய உத்தேச்யத்தில் ஏகதேசத்தைப் புருஷார்த்தத்தில் சரமாவதியாகக் கொள்ளுகையாலேயிறே முன்பு இவர் இத்தைச் சிரித்திருந்தது.

**அதுவேவீடு வீடுபேற்றின்பந்தானுமதுதேறி***
**எதுவேதானும்பற்றின்றி யாதுமிலிகளாகிற்கில்***
**அதுவேவீடு வீடுபேற்றின்பந்தானுமதுதேருது***
**எதுவேவீடேதின்பமென்று எய்த்தாரெய்த்தாரெய்த்தாரே. (7)**

ஒ.—ஏழாம்பாட்டில், இங்குச் சொன்னபடியே ஆத்மாவலோகநம் பண்ணப்பாராதே அத்தையும் விடக்ஷமராகில், அது மோக்ஷமாவதுவும் மோக்ஷத்தால் பெறும்ஸுகமாவதுவும். [அதுவே வீடென்று தேருதே மேலுக்கு] - அதுவே மோக்ஷமாவதுவும் மோக்ஷத்தால் பெறும் ஸுகமாவதுவும் என்று தேருதே எதுவே மோக்ஷம் எதுவே ஸுகம்'என்று அத்யவஸிக்கமாட்டாதார் என்றும் து:க்கப்பட்டேபோமத்தனை.

இ.—ஏழாம்பாட்டில், இங்குச் சொன்னபடியே ஆத்மாவலோகநம் பண்ணப்பாராதே வேறே சில வழிகளாலே ப்ராபிக்கப் பார்க்கில் அது கைவாராதென்கிறார். [அதுவே வீடு] - அந்த ஆத்மப்ராப்தியே மோக்ஷமாவது. [வீடு பேற்றின்பந்தானு மது] - அம்மோக்ஷத்தைப் பெற்றால் வரும் ஸுகமாகிறதும் அந்த ஆத்மாநுபவமே. [தேறி] - இப்படி தெளிந்து. [எதுவேதானும் பற்றின்றி] - ப்ரக்ருதியிலும் ப்ராக்ருதமான சப்தாதிகளிலும் உண்டான பற்றடங்க அற்று. [யாதுமிலிகளாகிற்கில்] - அவற்றிலுண்டான வாஸனைகளும் அறத் தவிரப்பெறில். கர்மத்தை அநுஷ்டித்து ஜ்ஞாநத்தையுடையனாய், ஸ்த்திதப்ரஜ்ஞாக்யாவஸ்த்தைகள் பிறந்து யோகமும் நிலைநின்று, ஆத்மஸாக்ஷாத்காரம் பண்ணப்பெறில். [அதுவே வீடு] - கீழ்ச் சொன்ன ஆத்மப்ராப்தியே மோக்ஷம். [வீடுபேற்றின்பந்தானு மது] - மோக்ஷஸித்தியால் வரும் ஸுகமும் அந்த ஆத்மாநுபவம். [தேருது] - இப்படி தெளியமாட்டாதே. [எதுவே வீடு ஏதின்பமென்று எய்த்தார்] - 'மோக்ஷமாகிறது எது? மோக்ஷஸுகமாகிறது எது?' என்று இளைத்தவர்கள். [எய்த்தாரெய்த்தாரே] - என்றும் க்லேசப்பட்டுப் போமித்தனை. நிராச்ரயமாக ஆத்மஸ்வரூபத்தை அநுஸந்திக்கை நிஷ்ப்ரயோஜநமென்கை.

ஈடு.—ஏழாம்பாட்டு. கீழ்ச்சொன்ன உபாயத்தின்படி அவ்வஸ்துவை ப்ராபிக்கமாட்டாதே அதிலே ஸம்சயமநுவர்த்திக்குமவர்கள் உருவ க்லேசப்பட்டேபோமித்தனையென்கிறார்.

[அதுவேவீடு] கீழ்ச்சொன்ன அதுவே ஆத்மப்ராப்திலக்ஷணமோக்ஷமாகிறது. [வீடு பேற்றின்பந்தானுமது] அம்மோக்ஷத்தை ப்ராபித்தால்வரும் ஸுகமும் அதுவே. [தேறி] இப்படி தெளிந்து. [எதுவேதானும் பற்றின்றி] ப்ரக்ருதி ப்ராக்ருதங்களிலுண்டான தொற்றற்று. [யாதுமிலிகளாகிற்கில்] அதில் ருசிவாஸனைகளும் அறப்பெறில். கர்மத்தையநுஷ்டித்து

ஜ்ஞானத்தையுடையனாய், ஸ்த்திதப்ரஜ்ஞாக்யாவஸ்த்தை பிறந்து, யோகமும் தலைநின்று ஆத்மஸாக்ஷாத்காரம்பண்ணப்பெறில். [அதுவே வீடு] மேற்சொன்ன ஆத்ம ப்ராப்தியே மோக்ஷம். [வீடுபேற்றின்பந்தானுமது] மோக்ஷஸித்தியில் வரும் ஸுகமும் அந்த ஆத்மாநுபவம். [தேறாது] இப்படி தெளியமாட்டாதே [ஏதுவேவீடு ஏதின்பமென்றெய்த்தார்] 'மோக்ஷமாவிறது ஏது? மோக்ஷஸுகமாவிறதுஏது?' என்று இளைத்தவர்கள். [எய்த்தாரெய்த்தாரே] இளைத்தாரிளைத்தாரென்று உருவ க்லேசப் பட்டேபோமித்தனை; நிராச்ரயமாக ஆத்மஸ்வரூபத்தை அநுஸந்திக்கை நிஷ்ப்ரயோஜநமென்கை.

**எய்த்தாரெய்த்தாரெய்த்தாரென்று இல்லத்தாரும்புறத்தாரும்**
**மொய்த்து* ஆங்கலறிமுயங்கத் தாம்போகும்போது*உன்மத்தர்போல்**
**பித்தேயேறியனுராகம்பொழியும்போது எம்பெம்மானோ**
**டொத்தேசென்று* அங்குள்ளங்கூடக்கூடிற்றாகில் நல்லுறைப்பே. (8)**

ஒ.—எட்டாம்பாட்டில், இப்படி துஸ்ஸம்பாதமான ஜ்ஞாநம் ஒருபடி கைவந்தாலும், அந்திமஸ்ம்ருதி இல்லையாகில் அந்த ஜ்ஞாநம் கைவருகைக்குப்பட்ட க்லேசமெல்லாம் வ்யர்த்தமென்கிறார். [எய்த்தாரென்று தொடங்கி] - முடிந்தாரென்று பலகால் சொல்லி ஸ்வக்ருஹத்தில் பார்யாதிகளும் அவர்களுடைய அவஸ்த்தையை அறியவந்த புறம்புள்ளாரும் திரண்டு அத்தசையிலே இவர்கள் தங்களுக்கு பயாவஹமாம்படிக் கூப்பிட்டுக் கட்டிக்கொள்ள, தாங்கள் சரீரத்தை விட்டுப்போம்போது. [உன்மத்தரென்று தொடங்கி] - எத்தனையேனும் வீதராகருங்கூட உன்மத்தரைப்போலே அறிவுகெட்டுப் புத்ராதிகள் பக்கலிலே மிகவும் ஸ்நேஹத்தைப்பண்ணும் தசையிலே எம்பெருமானுடைய வைலக்ஷண்யத்தை அநுஸந்தித்து "இப்படி விலக்ஷணன்" என்று ஆத்மாவை அநுஸந்திக்கக் கூடிற்றாகில் ஆத்மப்ராப்தி ஸித்திப்பது. இல்லாவிடில் செய்ததெல்லாம் வ்யர்த்தம். "நின்ற ஒன்றை உணர்ந்து" என்கிற பாட்டுத் தொடங்கி இப்பாட்டளவும், "அவர் நிஷ்க்ருஷ்டாத்மாநுஸந்தாந மாத்ரமின்றிக்கே பகவச்சேஷமானவனாவும் ஆத்மாவை அநுஸந்திக்கிறது" என்றும், இப்பாட்டில், "அந்திமஸ்ம்ருதியும், எம்பெருமான் இவ்வாத்மா தனக்கு சேஷியென்றிருக்குமாபோலே, இவன்றனக்கும் அத்தசையில் சேஷத்வாநுஸந்தானம் கூடுமாகில் அவனுக்கு ஆத்மப்ராப்தி உள்ளது. இல்லையாகில் கிடையாது" என்றும் சொல்லுவர்.

இ.—எட்டாம்பாட்டில், இத்து:க்கஸம்பாதநமானஜ்ஞாநம் கைவந்தாலும் அந்திமஸ்ம்ருதி இல்லையாகில் இஜ்ஜ்ஞாநம் கைவநுகைக்குக் கீழ்ச் செய்தவையெல்லாம் வ்யர்த்தமென்கிறார். [எய்த்தாரெய்த்தாரெய்த்தாரென்று] - இவனுக்கு உத்க்ரமணதசை பிறப்பதற்குமுன்னே இவன்முடிகை இஷ்டமாயிருக்கையாலே, "முடிந்தான்" என்று பலகாலும் சொல்லுவர்கள். இவன் கலங்கினதசையில் நெஞ்சைத் தெளியவிட ப்ராப்தமாயிருக்க, இவன் பயப்படும்படி "முடிந்தான், முடிந்தான்" என்பர்கள். [இல்லத்தாரும்] - இவன்பார்யாதிகள் ஜீவிக்கும்நாள் லோபத்தாலே சிலவற்றை மறைத்துப் போருகையாலே, "இது ஒரு நடுவில் பெருங்குடி என்? எல்லாம் நமக்கே ஆகவேணும்: இவன்போக அமையும்" என்றிருப்பர்கள். [புறத்தாரும்] - இவனும் இவர்களுமான ஸமுதாயந்தன்னைப் பொருமையாலே புறம்புள்ளார், "போக அமையும்" என்றிருப்பர்கள். பார்யாதிகளுடைய அநாத்மகுணங்களைப் புறம்புள்ளார்க்கு மறைத்திறே இவன்போருவது. [மொய்த்து] - கல்யாணத்துக்கு அழைக்கவேணும்; து:க்கத்துக்குத் தாங்களே வருவர்கள் ஆதரத்தாலே. [ஆங்கலறி] - மீளுகைக்கு சங்கை உண்டான தசையிலே, பயத்தாலே ப்ராணன் போம்படி கூப்பிடுவர்கள். [முயங்க] - கட்டிக்கொள்ள; மோஹிக்க என்னவுமாம். கூப்பீட்டிலே போகாத குறைப்ராணனும் போம்படி, ஸ்நேஹித்தார்களாக மேல்விழுந்து கட்டிக்கொள்ளுவர்கள். [தாம்போகும்போது] - "இவர்களைவிட்டுப் போகாநின்றோம்!" என்று நெஞ்சு அங்கேகிடக்க, தன்னால் மீளவொண்ணாதபடியாலே சரீரத்தைவிட்டுத் தாங்களே போகாநிற்பர்கள். [உன்மத்தர் இத்யாதி] வீதராகருங்கூட உந்மாததசையிற்போலே அறிவுகெட்டு; தெளிவு பிறந்து ஸர்வேச்வரனையும் தன்னையும் அநுஸந்திக்கவேண்டும் தசையிலே கலங்கி. [அநுராகம் பொழியும்போது] - புத்ராதிகள்பக்கலிலே முன்பு ஸ்நேஹியாத நாளைக்கும் போர ஸ்நேஹத்தைப் பண்ணும். இத்தசையிலே அபிமதவிஷயங்களை முன்னே

கொடுவந்து நிறுத்துவர்கள். ஜீவித்த நாள், லோபத்தாலே த்ரவ்யத்தைப் புதைத்துவைத்து உபேக்ஷித்தவன் இப்போதாக 'த்ரவ்யத்தையிட்டு அவர்களை பூஷித்துக் காணப்பெற்றிலோம்' என்று கீழ் ஸ்நேஹியாத நாளைக்கும் போர ஸ்நேஹிக்கத் தொடங்கும். [எம்பெம்மான் இத்யாதி] - அத்தசையில் தெளிவு பிறந்து ஈச்வரனுடைய வைலக்ஷண்யத்தை யநுஸந்தித்து, இப்படி அவனோடொத்த சுத்தி இவ்வாத்மாவுக்கு உண்டென்று அநுஸந்திக்கக் கூடிற்றாகில் நல்லவாய்ப்பு. ஆத்மப்ராப்தி ஸித்திக்கும். அல்லாதபோது செய்ததெல்லாம் வ்யர்த்தம். உன்மத்தர்போல் பித்தேறில் அபிமதம் ஸித்தியாது. அநுராகம் பொழியில் ஆதிபரதனைப்போலே மானாய்ப்போமித்தனை. " 'நின்றவொன்றை, என்கிறபாட்டுத் தொடங்கி நிஷ்க்ருஷ்டாநுஸந்தானமாத்ரமன்றியே பகவச்சேஷத்வபர்யந்தமாக அநுஸந்திக்கிறது, இப்பாட்டிலே 'எம்பெம்மானோடு ஒத்தே சென்று அங்குள்ளங்கூடக் கூடிற்றாகில்' என்கிற அந்திமஸ்ம்ருதியும் எம்பெருமான் தனக்கு சேஷமாக இவ்வாத்மாவை நினைத்திருக்குமாபோலே இவனுக்கும் அத்தசையிலே சேஷத்வாநுஸந்தானம் கூடுமாகில் நல்லவாய்ப்பு" என்று ஆண்டான் நிர்வஹிக்கும். பகவத்குணங்களிலே வித்தராயிருக்கிற இவர் இதெல்லாம் அநுஸந்திக்கிறதென்? என்னில்,—இப்படி துர்லபமாயிருக்கிற இத்தைக்கிமர் எனக்குக் காட்டித்தந்தது! என்று அவன்பக்கல் உபகாரஸ்ம்ருதியாலே என்கிறார்.

அ.—எட்டாம்பாட்டு. இப்படி துஸ்ஸம்பாதமான ஜ்ஞானம் கைவந்தாலும், அந்திமஸ்ம்ருதியில்லையாகில் செய்ததெல்லாம் வ்யர்த்தமென்கிறார்.

[எய்த்தாரெய்த்தார் எய்த்தார் என்று] இவனுக்கு உத்க்ரமணதசை பிறப்பதற்கு முன்னே இவன் முடிகை இஷ்டமாயிருக்கையாலே, "முடிந்தான் முடிந்தான் முடிந்தான்" என்று பலகாலும் சொல்லாநிற்பர்களாயிற்று. இவன் கலங்கினதசையிலே நெஞ்சைத்தெளிவித்து உத்தேச்ய வஸ்துவை அநுஸந்திக்கவல்லனாம்படி, பண்ணுகையன்றிக்கே, "முடிந்தான், முடிந்தான், முடிந்தான்" என்கிற இத்தையே சொல்லாநிற்பர்களாயிற்று. [இல்லத்தாரும் புறத்தாரும்] இவன் தான் உள்ளநாளில இவர்களுக்கு ஒன்றுங்கொடாமையாலே, "இவனும் இதொரு நடுவிற்பெருங்குடியுமென்? இவன் முடிந்து உள்ள த்ரவ்யத்தை நாமே விநியோகங்கொண்டாலாகாதோ?" என்றிருப்பர்கள் பார்யாதிகள். [புறத்தாரும்] அவனும் இவர்களுமான ஸமுதாயம் பொறாமையாலே "போகவமையும்" என்றிருப்பர்கள் புறம்புள்ளார். [மொய்த்து] கல்யாணத்துக்கு அழைத்தாலும் வாராதவர்கள், ஆக்கமுண்டானவாறே தாங்களே வந்து மேல்விழுவர்கள். [ஆங்கலறி] இவனுக்குள்ளதெளிவும் போம்படி கூப்பிடாநிற்பர்கள்; பிழைக்கைக்கு சங்கையுண்டான தசையிலே, பயத்தாலே ப்ராணன்போம்படி கூப்பிடுவர்கள். [மையக]கட்டிக்கொள்ள. கூப்பீட்டுக்குப் போகாத குறைப்ராணன்களும் போம்படி, ஸ்நேஹிகளைப்போலே மேலேவிழுந்து கட்டிக்கொள்வர்கள். [தாம்போகும்போது] "இவர்களையும் இவ்வைச்வர்யத்தையும் விட்டுப்போகாகின்றோம்" என்று நெஞ்சு இங்கேயிழுக்க, தன்னால் மீளவொண்ணாமையாலே சரீரத்தைவிட்டுத் தாங்களே போகாநிற்பர்கள். "தாம்போகும் போது" என்கிறார்காணும் அப்போதைக்லேசத்தைப்பற்ற. [உன்மத்தர் இத்யாதி] வீதராகருங்கூட, உன்மாததசையிற்போலே அறிவுகெட்டு; தெளிவுபிறந்து தன்னையும் ஸர்வேச்வரனையும் அநுஸந்திக்கவேண்டும் தசையிலே கலங்கி. [அநுராகம் பொழியும்போது] இவையானைப் பொன்னையும் பூட்டிக்கொடுவந்து முன்னே நிறுத்துவர்கள். புதாதிகள்பக்கல் ஸ்நேஹியாத நாளைக்கும் போர ஸ்நேஹிக்கத்தொடங்கும். ஜீவிக்கும்நாள் லோபத்தாலே இவற்றுக்கு ஒன்றும் செய்யான். இப்போதாக "புதைத்துவைத்த தனத்தை ஆபரணமாகப் பூட்டிக் காணப்பெற்றிலோம்" என்று மதகுதிறந்து ஸ்நேஹிக்கும். [எம்பெம்மானோடொத்தே சென்று இத்யாதி] இப்படி கலங்குகிற ஸமயத்திலே தெளிவுண்டாய், தன்னையும் அவனையும் அநுஸந்தித்து "அவனோடொத்த சுத்தியையும் இது உடைத்து" என்று அநுஸந்திக்கை யாகிற இவ்வர்த்தம் கூடிற்றாகில், "அவ்வஸ்துவும் ஜ்ஞாநாநந்த லக்ஷணமாயிருக்கும். இவ்வஸ்துவும் ஜ்ஞாநாநந்தலக்ஷணமாயிருக்கும்" என்று அநுஸந்திக்கும்படி அவ்வாத்மவஸ்துவிலே ஹ்ருதயம் சேருகையாகிற அர்த்தம் கூடுமாகில். [நல்துறைப்பு] நல்லவாய்ப்பு. (ஆத்மப்ராப்தி ஸித்திக்கும்.) அல்லாதபோது, செய்ததெல்லாம் வ்யர்த்தம். உன்மத்தர்போல் பித்தேயேறில் அபிமதம் ஸித்தியாது. அநுராகம் பொழியில் ஆதிபரதனைப்போலே மானாய்ப்

போமித்தனை. ஆண்டான் பணிக்கும்படி-" 'நின்ற ஒன்றையுணர்ந்தேனுக்கு' என்னும் பாட்டுத் தொடங்கி, நிஷ்க்ருஷ்டாத்மாநுஸந்தாநமாத்ரமேயன்றிக்கே பகவச்சேஷத்வ பர்யந்தமாக அநுஸந்திக்கிறது; இப்பாட்டில் 'எம்பெம்மானோடொத்தே சென்றங்குள்ளங்கூடக்கூடிற்றாகில்' என்கிற அந்திமஸ்ம்ருதியும், எம்பெருமான் தனக்கு சேஷமாக இவ்வாத்மவஸ்துவை நினைத்திருக்குமாபோலே, இவனும் அவனோடொத்து அவன்நினைவோடொத்து அந்தசையிலே சேஷத்வாநுஸந்தாநம் கூடுமாகில் நல்லவாய்ப்பு" என்று. பகவத்குணங்களிலே விக்தராயிருக்கிற இவர் இதெல்லாம் அநுஸந்திக்கிறதென்? என்னில், "இப்படி அரிதாயிருக்கிற இத்தைக்கிடீர் எனக்குக் காட்டித்தந்தது" என்று அவன்பக்கல் உபகாரஸ்ம்ருதியாலே.

**கூடிற்றாகில்நல்லுறைப்புக் கூடாமையைக்கூடினால்***
**ஆடற்பறவையுயர்கொடி எம்மாயனாவதுவதுவே***
**வீடைப்பண்ணியொருபரிசே எதிர்வும் நிகழ்வுங்கழிவுமாய்***
**ஓடித்திரியும்யோகிகளும் உளருமில்லையல்லரே.** (9)

ஒ.—ஒன்பதாம்பாட்டில், அந்திமஸ்ம்ருதியிலே ஈச்வரனும் ஆத்மாவுமென்று இருவர் ப்ரஸக்தரானவாறே, "இந்த தத்த்வபேதம் இல்லை; இவ்வாத்மாவும் ப்ரஹ்மமும் ஒன்று" என்றுகொண்டு நித்யஸம்ஸாரியான சேதநனையே ப்ரஹ்மமாகச் சொல்லுகிற [மாயாவாதிகளை க்ஷேபிக்கிறார். கூடாமையென்று தொடங்கி] - "ஸர்வேச்வரபரிக்ரஹம்" என்னும் ஹர்ஷ ப்ரகர்ஷத்தாலே ஆடாநின்றுள்ள பெரியதிருவடியைத் தனக்குப் பரிகரமாகவுடையனும் ஆச்சர்யமான குணசேஷ்டிதங்களையுடையனுமான ஸர்வேச்வரனாகை ஸம்ஸாரியான இந்த ஜீவாத்மாவுக்குக்கூடுவது, அஸங்கதமான சசவிஷாணாதிகள் உண்டாகக்கூடில். [அதுவதுவே] - அந்த ஆத்மாவஸ்து அந்த ஆத்மவஸ்துவேயா யிருக்குமத்தனை. [வீடைப் பண்ணியென்று மேலுக்கு] - இங்ஙனே மோக்ஷஞ் சொல்லுவாரும் உளரோ என்னில்,—ப்ரமாணமூலமாகவன்றிக்கே ஸ்வபுத்திகளாலே சிலவற்றை மோக்ஷமாகக்கட்டிக் காலத்ரயத்திலும் மோக்ஷத்துக்கு யத்நம்பண்ணி வ்யர்த்தமே தட்டித்திரிவாரும் உளர்; இல்லாமை இல்லை.

இ.—ஒன்பதாம்பாட்டில், அந்திமஸ்ம்ருதியிலே ஜீவபரபேதம் ப்ரஸ்துதமானவாறே, இந்தபேதம் அபரமார்த்தம். தத்த்வஜ்ஞாநம் பிறந்தால் ஆத்மாவும் ப்ரஹ்மமும் ஒன்று" என்றுகொண்டு நித்யஸம்ஸாரியான சேதநனையே ப்ரஹ்மமாகச் சொல்லுகிற மாயாவாதிகளை க்ஷேபிக்கிறார். [கூடிற்றாகில் நல்லுறைப்பு] - அநுபாஷணம். [கூடாமையித்யாதி] - "ஸர்வேச்வரபரிக்ரஹம்" என்னும் ஹர்ஷப்ரகர்ஷத்தாலே ஆடாநின்றுள்ள பெரியதிருவடியைத் தனக்கு வ்யாவர்த்தக விசேஷணமாகவுடையனும் ஆச்சர்யகுண சேஷ்டிதங்களையுமுடைய ஸர்வேச்வரனாகை இஸ்ஸம்ஸாரியான ஜீவாத்மாவுக்குக் கூடுவது, சசவிஷாணம் வந்த்யாஸுதன் என்கிற அநுபபந்நங்கள் உபபந்நமாகக்கூடில். [அது அதுவே] - அந்த ஆத்மவஸ்து அந்த ஆத்மவஸ்துவேயா யிருக்குமத்தனை; கருடவாஹநனும், ஸமஸ்த கல்யாண குணாத்மகனும், அதிமாநுஷசேஷ்டிதனுமான ஸர்வாதிகனாகமாட்டாது தத்த்வஜ்ஞாநம் பிறந்தவாறே, வஸ்து வஸ்த்வந்தரமாமோ? "அந்யத்ராவ்யம்ஹி நைதிதத்தரவ்யதாம்யத:". [வீடைப்பண்ணி யித்யாதி]-நித்யஸித்தர்க்கும் அவ்வருகான தத்த்வமாக நித்யஸம்ஸாரியைச் சொல்லுவார் உண்டோ? என்னில்,—அப்படி இருப்பாரும் உண்டென்கிறார். [ஒருபரிசே வீடைப்பண்ணி] - சாஸ்த்ரமூலமாகவன்றிக்கே அவித்யா நிவ்ருத்தியே மோக்ஷமென்று ஸ்வபுத்தியாலே ஒன்றைக்கட்டி. [எதிர்வும் இத்யாதி] - பூதபவிஷ்யத் வர்த்தமாநகாலத்ரயங்களிலும் உளராய், நிஷ்ப்ரயோஜநமாகத் தட்டித்திரியும் மகாயோகிகளும் உளர். [இல்லையல்லரே] - இல்லாமை இல்லை. காலம் அநாதி; பண்ணிவைக்கும் பாபங்களுக்கு எல்லை இல்லை. இப்படி இருப்பாரில் மஹாபுருஷர்கள் உண்டாகக்கூடாதோ? ஸம்ஸாரத்தில் கூடாதது உண்டோ?

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. அந்திமஸ்ம்ருதியிலே ஜீவபரபேதம் ப்ரஸ்துதமானவாறே, "இந்தபேதம் அபரமார்த்தம்; தத்த்வஜ்ஞாநம் பிறந்த ஆத்மாவும் ப்ரஹ்மமும் ஒன்று" என்றுகொண்டு நித்யஸம்ஸாரியான சேதநனையே ப்ரஹ்மமாகச் சொல்லுகிற மாயாவாதிகளை க்ஷேபிக்கிறார்-

[கூடிற்றாகில் நல்லுறைப்பு] அநுபாஷணம். [கூடாமை இத்யாதி] சசவிஷாணமாதல், ககநகுஸுமமாதல், வந்த்யாஸுதனாதல் அநுபபந்நமானவை கூடுமாகில், "ஸர்வேச்வர வாஹநம்" என்னும் ஹர்ஷப்ரகர்ஷத்தாலே ஆடாநின்றுள்ள பெரிய திருவடியை த்வஜமாக வுடையவனாய், ஆச்சர்யமான குணசேஷ்டிதங்களை யுடையனாய், பெரிய திருவடி திருத்தோளிலே பின்பும் பிராகுவாளியுமாய் ஸம்ஸாரிசேதநனிருப்பது. [அதுவதுவே] அவ்வஸ்து அவ்வஸ்துவே; வஸ்து வஸ்த்வந்தரமாகாதிறே. நித்ய ஸித்தர்க்கும் அவ்வருகாக ஸம்ஸாரி சேதநரைச் சொல்லுவாரும் சிலருண்டோவென்ன,—[வீடைப்பண்ணியொருபரிசே] [ஒருபரிசே-வீடைப்பண்ணி] சாஸ்த்ரமூலமாக வன்றிக்கே, அவித்யாநிவ்ருத்தியே மோக்ஷமென்று ஸ்வபுத்தியாலே ஒன்றைக்கட்டி. [எதிர்வும் நிகழ்வும் கழிவுமாய்]பூதபவிஷ்யத்வர்த்தமாந காலத்ரயத்திலுமுளராய். [ஓடித்திரியும் யோகிகளுமுளரும்]நிஷ்ப்ரயோஜநமாகத் தட்டித் திரியும் மஹாயோகிகளும் உளர். [இல்லையல்லரே] இல்லாமையில்லை. காலம் அநாதி: பண்ணிவைக்கும் பாபங்களுக்கு எல்லையில்லை; இப்படியிருப்பார் சில மஹாபுருஷர்களுண்டாகக் கூடாதோ? ஸம்ஸாரத்தில் கூடாததுண்டோ?

**உளருமில்லையல்லராய் உளராயில்லையாகியே***
**உளரெம்மொருவரவர்வந்து என்னுள்ளத்துள்ளேயுறைகின்றார்***
**வளரும்பிறையுந்தேய்பிறையும்போல அசைவுமாக்கமும்***
**வளருஞ்சுடருமிருளும்போல் தெருளும்மருளும்மாய்த்தோமே. (10)**

ஒ.—பத்தாம்பாட்டில், ஸாங்க்யாதிகுத்ருஷ்டிகளில் நான் புகாமே காத்து எனக்கு சேஷியான தான், என்னோடேவந்து நிரந்தரஸம்ச்லேஷம் பண்ணுகையாலே என்னுடைய ஸகலது:க்கங்களும்போயிற்று என்கிறார். [உளருமில்லையல்லராய்] - "இல்லையென்னவொண்ணாதே அஸ்திமாத்ரமாயிருப்பர்" என்று ஸேச்வரஸாங்க்யமதம். [உளராயில்லையாகியே]-"இல்லையாகியே உளரென்று நிரீச்வரஸாங்க்யமதம். இவையிரண்டையும் ஆச்ரித அநாச்ரிதவிஷயமென்றுஞ் சொல்லுவர். [உளரென்று தொடங்கி] குணவிபூத்யாதிகளெல்லாவற்றாலும் பூர்ணமாயிருந்துள்ளவர் அவற்றைக்காட்டி என்னை அடிமைகொண்டு என்னுடைய ஹ்ருதயத்திலே எப்போதும் வர்த்தியாநின்றார். [வளருமென்று தொடக்கு] - வளரும்பிறையும் தேய்பிறையும்போலே மாறிமாறி வருகிற வ்ருத்திக்ஷயங்களும், தம:ப்ரகாசங்கள் போலே மாறிமாறிவருகிற ஜ்ஞாநாஜ்ஞாநங்களும் போக்கப்பெற்றோம்

இ.—பத்தாம்பாட்டில், ஸாங்க்யகுத்ருஷ்டிகளில் நான் புகாதபடி தானே ஸ்வயம்வரித்து அஜ்ஞாநாதிகளுக்கு அவகாசம் இல்லாதபடி நினைவுக்கு வாய்த்ததையான மநஸ்ஸிலே நித்யவாஸம் பண்ணுகையாலே, என்னுடைய ஸகலது:க்கங்களும் போயிற்று என்கிறார். [உளருமில்லையல்லராய்] - "இல்லையென்னவொண்ணாதே அஸ்திமாத்ரமாயிருப்பர்" என்று ஸேச்வரஸாங்க்யமதம், விதிநிஷேதக்ஷம மன்றிக்கேயிருக்கும் பர்த்தாவைப்போலே, ஈச்வரனுகிறான் ஜகந்நியமநக்ஷமனன்றிக்கே ஸத்பாவமாத்ரமாயிருக்கை. [உளராயில்லையாகியே] - "இல்லையாகியே உளர்" என்று நிரீச்வரஸாங்க்யமதம். இல்லையாய்க்கொண்டே அவ்வஸ்துவினுடைய ஸத்பாவமென்கை. 'ஆச்ரிதர்க்கு இல்லையல்லராய் உளர்; அநாச்ரிதர்க்கு இல்லையாகியே உளர்' என்று ஆச்ரித அநாச்ரித விஷயமென்றும் சொல்லுவர். [உளரெம்மொருவர்] - குணவிபூத்யாதிகளால் பூர்ணராய்க்கொண்டு உளராய், அவற்றைக்காட்டி என்னை விஷயீகரித்த அத்விதீயர். [அவர்வந்து என்னுள்ளத்துள்ளே உறைகின்றார்] - குணாதிகரானவர் என்னளவும் வந்து மயர்வற மதிநலமருளித் தாந்திருத்தின நெஞ்சிலே நித்யவாஸம்பண்ணாநின்றார். [வளரும் இத்யாதி] - அவன்வந்து நித்யவாஸம் பண்ணுகையாலே சந்த்ரனைப்போலே மாறிமாறிவருகிற வ்ருத்திக்ஷயங்களும், ஆதித்யனையும் அந்தகாரத்தையும்போலே மாறிமாறிவருகிற ஜ்ஞாநாஜ்ஞாநங்களும் நிச்சேஷமாகப் போகப்பெற்றோம்.

ஈடு.—பத்தாம்பாட்டு. ஸாங்க்யாதிகுத்ருஷ்டிகளில் நான் புகாதபடி தானே ஸ்வயம்வரித்து நினைவுக்கு வாய்த்ததையான மநஸ்ஸிலே நித்யவாஸம் பண்ணுகையாலே, என்னுடைய ஸகல துரிதங்களும் போயிற்றென்கிறார்.

[உளருமில்லையல்லராய்] "ஈச்வரனென்பானொருவனுளன். இல்லையென்ன வொண்ணுதே அஸ்திமாத்ரமாயிருக்கும்" என்று ஸேச்வரஸாங்க்யமதம். விநிகேஷதக்ஷமன்றிக்கே யிருக்கும் பர்த்தாவைப்போலே, ஈச்வரனுமிருன் ஜகந்நியமநக்ஷமனன்றிக்கே ஸத்பாவமாத்ரமே யாயிருக்குமென்கை. [உளராயில்லையாகியே] "இவையாகியேகாண் அவனுடையவுண்மை" என்னும் நிரீச்வரஸாங்க்யன். அந்தபக்ஷங்களை நிரஸிக்கிருர். அன்றிக்கே, ஆச்ரிதாநாச்ரித விஷயமாக்கி, இல்லையல்லராய் உளராயிருப்பர் ஆச்ரிதர்க்கு; இல்லையாகியே யுளராயிருப்பர் அநாச்ரிதர்க்கு. [உளரெம்மொருவர்] குணவிபூத்யாதிகளால் பரிபூர்ணராய்க்கொண்டு உளராய், அவற்றைக்காட்டி என்னை விஷயீகரித்த அத்விதீயர். [அவர்வந்து என்னுள்ளத்துள்ளையுறைகின்ருர்] குணாதிகரானஅவர் என்னளவும் வந்து, மயர்வறமதிநலமருளித் தாம் திருத்தின நெஞ்சிலே நித்ய வாஸம்பண்ணுகின்ருர் [வளரும் இத்யாதி] தீபஸந்நிதியில் அந்தகாரம் நில்லாதாப்போலே, அவர் என் ஹ்ருதயத்திலே நித்யவாஸம் பண்ணுகையாலே, சந்த்ரனுக்குப் போலே மாறிமாறி வரக்கடவதான வ்ருத்திக்ஷயங்களும், ஆதித்யனும் அந்தகாரமும்போலே மாறிமாறிவரக்கடவதான ஜ்ஞாநாஜ்ஞாநங்களும் மாய்க்கப்பெற்றேம்.

**தெருளும்மருளும்மாய்த்துத் தன்திருந்துசெம்பொற்கழலடிக்கீழ்***
**அருளியிருத்துமம்மானும் அயனுஞ்சிவனும் திருமாலால்***
**அருளப்பட்ட சடகோபன் ஓராயிரத்துளிப்பத்தால்***
**அருளியடிக்கீழிருத்தும் நம்மண்ணல்கருமாணிக்கமே. (11)**

ஒ.—நிகமத்தில், இப்பத்தும் கற்ருரை, ஆழ்வார்தம்மைவிஷயீகரித்தாப்போலே எம்பெருமான் தானே வந்து விஷயீகரித்துத் தன்திருவடிகளின்கீழே வைத்துக் கொள்ளும் என்கிருர். [தெருளும் மருளுமென்று மேலுக்கு] - ப்ரஹ்மருத்ர ப்ரமுகரான ஸர்வாத்மாக்களுக்கும் ஈச்வரனும், தன்னை அநுபவிக்கைக்கு விரோதியான ப்ராக்ருத விஷய ஜ்ஞாநாஜ்ஞாநங்களைப்போக்கி, தன்னை ஆச்ரயித்தவர்களைத் தன்திருவடிக்கீழே சேர்த்துக்கொண்டருளும் ஸ்வபாவனுன ச்ரிய:பதியாலே நிர்ஹேதுகமாக விஷயீகரிக்கப்பட்ட ஆழ்வாருடைய.

இ.—நிகமத்தில், இப்பத்தும் கற்ருரை, தம்மை விஷயீகரித்தாப்போலே விஷயீகரித்துத் தன் திருவடிகளின்கீழே வைத்துக்கொள்ளுமென்கிருர். [தெருளும்மருளும் மாய்த்து] - ப்ரஹ்மாவின் ராஜஸமடியாகவந்த குத்ருஷ்டி ஜ்ஞாநமானதும், ருத்ரன்தாமஸமடியாகவந்த ஆகமாதிபாஹ்ய ஜ்ஞாநமான அஜ்ஞாநமும் மாய்த்து. ஸ்வாநுபவவிரோதியான ப்ராக்ருதவிஷய ஜ்ஞாநாஜ்ஞாநங்களைப் போக்கி. [தன்திருந்து செம்பொற்கழலடிக்கீழ்] - ஆச்ரிதரை வேறொருவர்காலிலே போகவிடாததாய், ஸ்ப்ருஹணீயமாய், வீரக்கழலையுடைத்தான தன்திருவடிகளின் கீழே. இப்போதை வீரக்கழல், பிராட்டிமுன்னாக ஆச்ரயித்தாரைத் தன்கையிலும் பிறர்கையிலும் காட்டிக்கொடாத வீரக்கழல். [அருளியிருத்தும்] - கேவலக்ருபையாலே இருத்தும். [அம்மானும் அயனும் சிவனும் திருமாலால்] - ப்ரஹ்மருத்ரப்ரமுகரான ஸர்வாத்மாக்களுக்கும் நிர்வாஹகனும், ஸர்வேச்வரனுன ச்ரிய:பதியாலே. [அருளப்பட்ட சடகோபன்] - "மயர்வறமதிநலம் அருளினன்" என்கிறபடியே - க்ருபைக்கு விஷயபூதரான ஆழ்வார். இவ்வருளுக்கு வாய்த்தலை பிராட்டியென்கை. [ஓராயிரத்துள் இப்பத்தால்] - இப்பத்தை அப்யஸித்தவர்களை அதுவே ஹேதுவாக. [நம்மண்ணல் கருமாணிக்கம் அருளி அடிக்கீழ் இருத்தும்]-நமக்கு ஸ்வாமியாய் ஸ்ப்ருஹணீயமான வடிவழகையுடையவன், தன்கேவலக்ருபையாலே தன்திருவடிகளின்கீழே சேர்த்துக்கொள்ளும். இப்பத்தும் கற்றவர்களை ஆழ்வார்க்குப்பண்ணின க்ருபையைப் பண்ணிச் சேர்த்துக்கொள்ளும்.

*டு.—நிகமத்தில் இப்பத்தும் கற்ருரை, தம்மை விஷயீகரித்தாப்போலே விஷயீகரித்துத் தன் திருவடிகளின் கீழே வைத்துக்கொள்ளுமென்கிருர்.

[தெருளும் மருளும்மாய்த்து] ப்ரஹ்மாவின் ராஜஸமடியாக வந்த குத்ருஷ்டி ஜ்ஞாநமானதும், ருத்ரன் தாமஸஜ்ஞாநமடியாக வந்த ஆகமாதி பாஹ்யஜ்ஞாநமான அஜ்ஞாநமும்

மாய்த்து; ஸ்வாநுபவவிரோதியான ப்ராக்ருதவிஷயஜ்ஞாநாஜ்ஞாநங்களை வாஸனையோடே போக்கி. [தன் திருந்துசெம்பொற்கழலடிக்கீழ்] ஆச்ரிதரை வேறொருவர்காலில் குனியவிடாத தாய், ஸ்ப்ருஹணீயமாய், வீரக்கழலையுடைத்தான திருவடிகளின் கீழே. இப்போதை வீரக்கழல் பிராட்டி முன்னாக ஆச்ரயித்தாரைத் தன்கையிலும் பிறர்கையிலும் காட்டிக்கொடாத வீரக்கழல். [அருளியிருந்தும்] கேவல க்ருபையாலே இருந்தும். [அம்மானும் அயனும் சிவனும் திருமாலால்] ப்ரஹ்மருத்ர ப்ரமுகரான ஸர்வாத்மாக்களுக்கும் நிர்வாஹகனாய் ஸர்வேச்வரனை ச்ரிய: பதியாலே. [அருளப்பட்ட சடகோபன்] "மயர்வறமதிநலமருளினன் என்கிற படியே அருளுக்கு விஷயபூதரான ஆழ்வார். இவ்வருளுக்கு வாய்த்தலை பிராட்டியென்கை. [ஓராயிரத்துளிப்பத்தால்-நம்மண்ணல் கருமாணிக்கமே-அருளியடிக்கீழிருத்தும்] ஸர்வநிர்வாஹகனாய், ஸ்ப்ருஹணீயமான வடிவழகையும் குணங்களையுமுடையனான ஸர்வேச்வரன் தானேயருளித் தன்திருவடிகளின் கீழே சேர்த்துக்கொள்ளும். இத்திருவாய்மொழி யப்யஸித்தார்க்குத் தாம்பெற்ற பேறு என்கிறார்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## ஒன்பதாந்திருவாய்மொழி—கருமாணிக்கமலை : ப்ரவேசம்.

ஒ.— ஒன்பதாந்திருவாய்மொழியில், நிர்ஹேதுக பகவத்ப்ரஸாதத்தாலே அவனுடைய ஸௌந்தர்ய ஸௌசீல்யாத்யநுபவபூர்வகமாக ஸ்வசேஷத்வத்தை அநுஸந்தித்து மிகவும் ப்ரீதரான ஆழ்வார், ஸ்வதசையை அந்யாபதேசத்தாலே அருளிச்செய்கிறார். திருப்புலியூரில் எம்பெருமானோடே இயற்கையிலே புணர்ந்து பிரிந்தாளொரு பிராட்டி அவனாலே அபஹ்ருதசித்தையாய், "மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்" என்றிருக்கிற தன்மையை யறியாத பித்ராதிகள், 'இவளுடைய ஸ்வயம்வரத்துக்கு ராஜபுத்ரர்கள் வருவது' என்று நகரத்திலே பறை அறைவிக்கக் கேட்ட இவளுடைய தோழியானவள், "ஸ்ரீபரதாழ்வானை ராஜாவாக்கிப்பண்ணின தூர்யகோஷாதிகள் அவனுக்கு மிகவும் அஸஹ்யமாய்த் தரிப்பரிதானாப்போலே ராஜபுத்ரியும் இத்தை அறியில் ஜீவியாள்"; என்று பார்த்து "இவள் அறிவதற்கு முன்பே இத்தை விலக்க வேணும்', என்று துணிந்து, இவ்ஸம்ச்லேஷத்தை நான் அறிந்தமை அறிவிக்கில் என்காவற்சோர்வென்று கொள்ளுவர்; நான் அறியாதேனாயிருக்கில் இவளைக் கிடையாது; போம்வழி என்?" என்று பார்த்து இவளுடைய உறவு முறையார்க்கு "திருப்புலியூரில் எம்பெருமானுடைய குணசேஷ்டிதாதிகளிலே அபஹ்ருதசித்தையாய் மிகவும் ஈடுபட்டு அவற்றையே வாய்புலற்றக்காணா நின்றோம்; ஆனபின்பு, திருப்புலியூரில் எம்பெருமானுக்கல்லது வேறுசிலர்க்கு உரியளல்லள்" என்று அவர்களுபக்ரமித்த மணத்தை விலக்கி, இவளுடைய உறவுமுறையாரும் "புறம் ஒருத்தருக்கும் உரியளல்லளாகில், திருப்புலியூரில் எம்பெருமானுக்கு இவளுக்குத்தக்க அழகும் ஒப்பனையும் ஆண்பிள்ளைத்தனமும் குணவத்தையும் ஐச்வர்யமும் ஔதார்யமும் ப்ரணயித்வமும் ஸமாசாரமும் வேதார்த்ததத்வஜ்ஞாநமும் இன்னம் இப்புடையிலுண்டானஸத்குணங்களும் உண்டோ?" என்று கேட்க, தோழியும் "நீங்கள் சொல்லுகிறவளவல்ல; அத்யாச்சர்யபூதன்; அவனோடு ஸம்ச்லேஷித்தமைக்கு இவள்வடிவிலே வ்யக்தமான அடையாளங்களும் உள; ஆனபின்பு அவனுக்கே இவளைக் கொடுங்கோள்" என்கிறாள், இத்திருவாய் மொழியால் பகவச்சேஷத்வமே புருஷார்த்தமென்றும் அந்யசேஷத்வமும் ஸ்வஸ்வாதந்த்ர்யமும் அபுருஷார்த்தமென்றும் சொல்லப்பட்டது.

இ.—ஒன்பதாந் திருவாய்மொழியில், கீழில் திருவாய்மொழியிலே முதலிரண்டரைப்பாட்டாலே, அவன்ப்ரஸாதத்தாலே அவனுடைய ஸௌந்தர்ய ஸௌசீல்யாதிகளை அநுபவித்து, அவற்றுபாதி விலக்ஷணமுமாய் அநந்யார்ஹமுமாயிருக்கிற ஆத்மஸ்வரூபத்தைக் குலப்பாட்டுக்களாலே அநுஸந்

தித்து இனியரானார். அந்த சேஷத்வரஸத்தாலே ப்ரீதராய், ப்ரீதிபாரவச்யத்தாலே தாமானதன்மை அழிந்து, ஒருபிராட்டிதசையை ப்ராப்தராய், ஸ்வதசையை அந்யாபதேசத்தாலேபேசி இனியராகிறார். "ப்ரீதியில் அந்யாபதேசமுள்ளது இத்திருவாய்மொழியே" என்று ஆழ்வான் நிர்வஹிக்கும். திருப்புலியூரிலெம்பெருமானோடே இயற்கையிலே புணர்ந்து பிரிந்தாளொருபிராட்டி அவனாலே அபஹ்ருதசித்தையாய், "மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்" என்றிருக்கிற இவள்படியை, உயிர்த்தோழியானவள், இவள்வடிவில் வேறுபாட்டாலும் பேச்சில் வேறுபாட்டாலும் "ஸம்ச்லேஷம் வ்ருத்தம்" என்று அறிந்தாள்; இவையொன்றையும் அறியாதே "பதிஸம்யோகஸுலபம் வய:" என்கிற படியே 'ப்ராப்தயௌவனை' என்னும் இவ்வளவேகொண்டு, பித்ராதிகள் "ஸ்வயம் வரத்துக்கு ராஜபுத்ரர்கள் வருவது" என்று நகரத்திலே பறையறைவிக்க, கேட்ட தோழியானவள், ஸ்ரீபரதாழ்வானை ராஜாவாக்கிப்பண்ணின தூர்யகோஷம் அவனுக்கு அஸஹ்யமாய் அவன் பட்டதெல்லாம் பட்டாள். "ராஜபுத்ரீயும் இத்தை அறியுமாகில் ஜீவிக்கமாட்டாள்" என்று, "அவள் அறிவதற்குமுன்னே இத்தை விலக்கவேணும்; அதுசெய்யுமிடத்தில் ஸம்ச்லேஷத்தை நாம் அறிந்தமை அறிவிக்கில் 'நம்காவற்சோர்வு' என்றுகொள்வர்; பேசாதிருக்கில் அவர்கள் ப்ரவர்த்திக்கிறவையே தலைக்கட்டி இவளை இழக்கவரும்; இதுபோம் வழிஏது?" என்றுபார்த்து, "இவள்படியைக் கண்டு பந்துக்களும் விசாரியாநின்றார்கள்; நாமும் இனி நிருபணத்திலே இழிந்து அவ்வழியாலே யறிந்தோமாய் இத்தைவிலக்கவேணும்" என்று நிருபித்து இவள் திருப்புலியூர்நாயனார்குணசேஷ்டிதங்களிலே ஈடுபட்டு அவற்றையே வாய்புலற்றுகின்றாள்; இருந்தபடியால் ஸம்ச்லேஷம் வ்ருத்தமானாப்போலே இராநின்றது; இனி அவனுக்கே கொடுக்கப் பாருங்கோள்" என்று அறத்தோடு நிற்கிறாளாய்,—"நீங்கள்செய்கிறவை தர்மமன்று" என்று அவர்கள் உபக்ரமித்த மணத்தைவிலக்க; அவர்களும் "இவளுக்கு அவன் ஸத்ருசமாகப் போருமோ? அழகும் ஆபரணசோபையும் ஆண்பிள்ளைத்தனமும் குணமும் ஐச்வர்யமும் ஔதார்யமும் ப்ரணயித்வமும் ஸமாசாரமும் வேதார்த்த தத்த்வஜ்ஞாநமும் முதலான ஸத்குணங்களும் உண்டாகவேணுமே" என்ன, "அவனைப் பார்த்தால் 'இவள் அவனுக்குப்போராள்' என்னும்படி அவன் வைலக்ஷண்யம்; அது கிடக்க, அவனோடு ஸம்ச்லேஷித்தமை இவள்வடிவிலே வ்யக்தமாம் அடையாளங்களும் உண்டு; ஆனபின்பு அவனுக்கே கொடுக்கப்பாருங்கோள்" என்று அறத்தோடு நின்று அவர்கள் செய்கிறவற்றை விலக்குகிற தோழிவார்த்தையாயிருக்கிறது. கீழ்த்திருவாய்மொழியில், அநந்யார்ஹசேஷத்வம் சொல்லிற்று; இதில் அந்யசேஷத்வமும் ஸ்வஸ்வாதந்த்ர்யமும் அபுருஷார்த்தமென்கிறது. ஒரு கந்யகையாகில், ஒருவனுக்காயிருக்கையும், ஒருவனுக்கானால் பிறர்க்கு உரியளல்லளாயிருக்கையுமிறே ஸ்வரூபம்.

ஈடு.—கீழில் திருவாய்மொழியில், முதலிரண்டரைப்பாட்டாலே, அவனுடைய ஸௌந்தர்ய சீலாதிகளை அநுஸந்தித்து, அவற்றோபாதி விலக்ஷணமுமாய் அநந்யார்ஹமுமாயிருக்கிற ஆத்மஸ்வரூபத்தைக் குறைப்பாட்டாலே அநுஸந்தித்து இனியரானார். அந்த சேஷத்வரஸத்தாலே ப்ரீதராய், ப்ரீதிபாரவச்யத்தாலே தாமான தன்மையழிந்து ஒரு பிராட்டிதசையை ப்ராப்தராய், ஸ்வதசையை அந்யாபதேசத்தாலே பேசி இனியராகிறார். "ப்ரீதியில் அந்யாபதேசமுள்ளது இத்திருவாய்மொழியொன்றுமே" என்று ஆழ்வான் நிர்வஹிக்கும்படி. திருப்புலியூரில் எம்பெருமானோடே இயற்கையிலே புணர்ந்து பிரிந்தாளொருபிராட்டி அவனாலே அபஹ்ருதசித்தையாயிருக்கிறபடியை உயிர்த்தோழியானவள் கண்டு, இவள்வடிவில் வேறுபாட்டாலும் பேச்சில் வேறுபாட்டாலும் ஸம்ச்லேஷம் ப்ரவ்ருத்தம் என்றறிந்தாள். இவையொன்றையு மறியாதே, *பதிஸம்யோக ஸுலபம் வயோ த்ருஷ்ட்வா ச மே பிதா* என்கிற படியே, ப்ராப்தயௌவனையென்னு மிவ்வளவே கொண்டு, பித்ராதிகள் "ஸ்வயம்வரத்துக்கு ராஜபுத்ரர்கள் வருவது" என்று நகரத்திலே மணமுரசறைவிக்க, அத்தைக்கேட்ட தோழியானவள், ஸ்ரீபரதாழ்வானை, "நீ ராஜா" என்றுபண்ணின தூர்யகோஷம் செவிப்பட்டபோது அவன் பட்டதெல்லாம் பட்டு: "இத்த்வநி பெண்பிள்ளைசெவிப்படுமாகில் மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழாத தன்மையளாயிருக்கிற இவளைக்கிடையாது, ஏற்கவே பரிஹரிக்க வேணும், அது செய்யுமிடத்தில் 'திருப்புலியூர்நாயனாரோடே ஸம்ச்லேஷம் ப்ரவ்ருத்தமாயிற்று' என்போமாகில் நம் காவற்சோர்வாலே வந்ததாம். அறிவியாதொழியில் இவளை யிழக்க வரும்

இனி இவ்வளவில் செய்யலாவதென்?'' என்றுபார்த்து, ''இவர்கள்தாங்களும் 'இவளுக்கு வடிவிலே ஒரு வேறுபாடுண்டு; இதுக்கு ஹேது ஏதோ?' என்று விசாரியாநின்றார்கள். நாமும் இவர்களோடே நிரூபணத்தே யிழிந்து அவ்வழியாலே அறிந்தோமாய் இத்தை விலக்க வேணும்'' என்று நிரூபித்து ''இவள்வடிவிருக்கபடியால் இவளுக்குத் திருப்புலியூரில் நாயனாரோடே ஸம்ச்லேஷம் ப்ரவ்ருத்தமாயிற்றுப்போலேயிருந்தது. அவனுடைய குணசேஷ்டிதங்களையே வாய்புலற்றாநின்றாள். நீங்கள் செய்கிறவற்றைத் தவிருங்கோள்'' என்று அறத்தோடு நிற்கிறாளாய், ''இது தர்மமல்ல'' என்ன, ''ஆனால் நீ சொல்லுகிற திருப்புலியூரில் நாயனார்க்கு இவளுக்கீடான வைலக்ஷண்யமுண்டாகவேணும்; ஒப்பனையும் ஆண்பிள்ளைத்தனமும் குணமும் ஐச்வர்யமும் ஔதார்யமும் ப்ரணயித்வமுமுண்டாகவேணும், ஸமாசாரனுகவேணும்; வேதார்த்த தத்த்வஜ்ஞானமுடையனுகவேணும்; இவையெல்லாம் உண்டோ?'' என்ன, ''நீங்கள் கேட்கிறவளவல்ல; இவையெல்லாம் குறைவற்றவிஷயம். இவை யொன்றுமில்லையே யாகிலும் இவள்தான் அங்கே அநந்யார்ஹையானாள்; நீங்கள் செய்கிற இவற்றைத் தவிருங்கோள்'' என்று அத்தைவிலக்குகிறதாயிருக்கிறது. 'மணவிலக்கு' என்பதொரு களவித்துறை இது. திருமந்த்ரத்திலே தனக்கும் பிறர்க்குமாயிருக்கு மிருப்பைக் கழித்து அநந்யார்ஹ சேஷத்வத்தைச் சொல்லக்கடவதிறே, அது இங்குச் சொல்லுகிறது. கீழ்த்திருவாய்மொழியில் - அநந்யார்ஹ சேஷத்வஞ்சொல்லிற்று இதில் - அந்யசேஷத்வமும், ஸ்வஸ்வாதந்த்ர்யமும் அபுருஷார்த்த மென்கிறது. ஒருகந்யகை யாகில், ஒருவனுக்கே யாயிருக்கையும், ஒருவனுக்கேயானால் பிறர்க்குரிய ளல்லளாயிருக்கையுமிறே ஸ்வரூபம்.

**கருமாணிக்கமலைமேல் மணித்தடந்தாமரைக்காடுகள்போல்***
**திருமார்வுவாய்கண்கையுந்திகாலுடையாடைகள்செய்யபிரான்***
**திருமாலெம்மான் செழுநீர்வயல்குட்டநாட்டுத் திருப்புலியூர்***
**'அருமாயன்பேரன்றிப்பேச்சிலள் அன்னைமீர்!இதற்கென்செய்கேனோ? (1)**

ஒ.—முதற்பாட்டில், எம்பெருமானுடைய திவ்யாவயவஸௌந்தர்யத்தைக் கண்டு, அவ்வழகல்லது மற்றொன்று அறியாதபடி ஈடுபட்டாளென்கிறாள். [கருமாணிக்கமலை]-கறுத்தே இருள் நீக்குவதொரு மாணிக்க மலை. [மணித்தடம்] - தெளிந்த பொய்கையிலே. திருமார்புக்குச் சிவப்பு பிராட்டிஸந்நிதாநத்தாலே. இவளுக்கு இப்படி விலக்ஷணனான இவனைப் பெற்ற ப்ரியத்தாலே பிரானென்றும் எம்மானென்றும் சொல்லுகிறாள். [திருமாலென்று தொடங்கி] - முன்பு சொன்ன அழகோடே மேன்மையை உடையனாய்; அழகிய நீர்வாய்ப்பையுடைத்தான வயலையுடைய குட்டநாட்டுத் திருப்புலியூரில் பெறுதற்கு அரியனாய், அத்யாச்சர்யமான படியை யுடையனானவன்பேரன்றி, வேறு பேசுகிறிலள். [அன்னைமீர் இதற்கு என்செய்கேனோ] - அவர்கள் தன் வார்த்தை விச்வஸிக்கைக்காகத் தானும் அவர்களோடொக்க அறியாதாளாய், இதற்கு என் செய்கே னென்கிறாள்.

இ.—முதற்பாட்டில், அவனுடைய திவ்யாவயவ ஸௌந்தர்யத்தைக் கண்டு மற்றொன்று அறியாதபடி ஈடுபட்டாளென்கிறாள். ''கருமாணிக்கக் குன்றத்துத் தாமரைபோல் திருமார்வு கால் கண் கை செவ்வாயுந்தியான்'' என்று இருத்தும் வியந்தில் அநுபவித்தத்தைத் தோழிபேச்சாலே பேசி இனியராகிறார். [கருமாணிக்கமலைமேல்] - குளிர்ந்து ப்ரகாசகமாய், நிரதிசய போக்யமா யிருக்கும் வடிவு. அநுபவிப்பாருடைய மநஸ்ஸுக்குத் தாபஹரமாய், ப்ரகாசகமுமாய், அபரிச்சிந்ந போக்யமுமாயிருக்கை. கறுத்தே இருள்நீக்குவதொரு மலையென்றுமாம். [மணித்தடந்தாமரைக் காடுகள்போல்] - தெளிந்த தடாகத்திலே பரப்புமாறத் தாமரை பூத்தாப்போலேயாயிற்று, திவ்யாவயவங்களும் ததாச்ரயமான வடிவும் இருப்பது. திருமார்வுக்குச் சிவப்பு, பிராட்டிஸந்நிதாநத்தாலே. [வாய்] - அவள்வழியாலே உறவு பண்ணினார்க்கு அநுகூலபாஷணம் பண்ணும் திருவதரம். [கண்] - இனசொல்லுச் சொல்லப்புக்குத் தடுமாறினால், குறையும் தலைக்கட்டிக்கொடுக்கும் கண். [கை] - அந்நோக்குக்குத்தோற்றாரை அணைக்கும் கை. [உந்தி] - உத்தேச்யபூமியிலே விழாநின்றால் நடுவே கால் கட்டவற்றான உந்தி. [கால்] - இவை

விந்தனைக்கும்தோற்று விழும்திருவடிகள். [உடையாடைகள்] - அங்கே கிடந்தநுபவிக்கும் திருப்பீதாம்பரம். ''திருக்கமலபாதம்'' என்று, ''சிவந்தவாடை'' என்னக்கடவதிறே. [பிரான்] இவ்வவயவசோபையுடைய ''பக்தாநாம்'' என்றிருக்குமவன். [திருமால்] - அழகேயன்று, இவனுக்கீடான மேன்மையும் உண்டு. ''யஸ்ய ஸாஜநகாத்மஜா - அப்ரமேயம்ஹி தத்தேஜ:''. [எம்மான்] - ''இவனுக்கு இவன் போருமோ?'' என்னுதபடி விலக்ஷணனாகப் பெற்ற ப்ரீதியாலே என்னுயனென்கிறாள். [செழு நீரித்யாதி] - நீர்வாய்ப்பையுடைய வயலாலே அலங்க்ருதமான குட்டநாட்டுத் திருப்புலியூரிலே வர்த்திக்கிற பெறுதற்கு அரிய ஆச்சர்யகுணசேஷ்டிதங்களை யுடையவனுடைய; திருவயோத்யையிலுள்ளார்க்குச் சக்ரவர்த்தி திருமகனைப் போலேயாயிற்று இவனும். [பேரன்றிப் பேச்சிலள்] - பரவ்யூஹவிபவங்களில் திருநாமங்களைச் சொல்லுகிறிலள். [அன்னைமீர் இதற்கு என் செய்கேனே] - அவர்களோடொக்கத் தானும் அறியாதானாய், தன்வார்த்தையை விச்வஸிக்கைக்காக ச்சாதித்து, இதுக்கு என் செய்வேன்? என்கிறாள். உள்வாயிருந்த ப்ரீதிக்குப் போக்கு விட்டுச் சொல்லுகிறாள்.

ஈடு.—முதற்பாட்டு. அவனுடைய திவ்யாவயவ ஸௌந்தர்யத்தைக்கண்டு மற்றொன்றறியாதபடி ஈடுபட்டாளென்கிறாள். ''கருமாணிக்கக்குன்றத்துத் தாமரை போல் திருமார்வு கால்கண்கை செவ்வாயுந்தியான்'' என்று இருத்தும் வியந்திலநுபவித்த வித்தைத் தோழி பேச்சாலே பேசி இனியராகிறார்.

[கருமாணிக்க மலைமேல்] அநுபவிப்பார்நெஞ்சு குளிரும்படி கருமையையுடைத்தாய், ப்ரகாசத்தால் மிக்கிருப்பதாய், நிரதிசய போக்யமாயிருப்பதொரு மலைமேலே. கறுத்தே இருளநீக்குவதொரு மலையென்றுமாம். அபூதோபமை யிருக்கிறபடி. [மணித்தடந்தாமரைக் காடுகள் போல்] இப்படி இருப்பதொரு மலைமேலே, தெளிந்ததொருதடாகமாய், அதுகாடுபடத்தாமரைபூத்தாப்போலேயாயிற்றுத் திருமேனியும் திவ்யாவயவங்களு மிருப்பது. [திருமார்வு] பற்றாசான பெரியபிராட்டியார் எழுந்தருளியிருக்கும் திருமார்வு. திருமார்வுக்குச் சிவப்பு பிராட்டிஸம்ச்லேஷத்தாலே. [வாய்] அவள் வழியாலே உறவுபண்ணினார்க்கு அநுகூலபாஷணம் பண்ணுகிற திருப்பவளம். [கண்] இன்சொல்லுச் சொல்லப்புக்கு அநுகூலதர்சநத்தாலே தடுமாறினால், குறையும் தலைக்கட்டிக்கொடுக்கும் கண். [கை] நோக்குக்குத் தோற்றாரை அணைக்கும் கை. [உந்தி] உத்தேச்யபூமியிலே விழாநின்றால் நடுவே கால்கட்டவல்ல திருவுந்தி; நடுவே மறுக்கும் சுழியிறே. [கால்] இவையெல்லாவற்றுக்கும் தோற்று விழும் திருவடிகள். [உடையாடைகள்] அங்கே கிடந்தநுபவிக்கும் திருப்பீதாம்பரம்; ''கமல பாதம்'' என்று, ''சிவந்த வாடை'' என்னக்கடவதிறே. [பிரான்] இவ்வவயவசோபையுடைய *பக்தாநாம் * என்றிருக்குமவன். [திருமால்] அழகேயன்றிக்கே, இவனுக்கீடான மேன்மையுமுண்டு. *யஸ்ய ஸா ஜநகாத்மஜா-அப்ரமேயம் ஹி தத்தேஜ.* என்கிறபடியே. [எம்மான்] ''இவளை அவனுக்குக் கொடுங்கோள்'' என்றால் ''இவனுக்கு அவன்தரம் போருமோ?'' என்னவேண்டாதபடி யிருப்பதே என்னுயன்! என்கிறாள். [செழுநீர் இத்யாதி] அழகிய ஜலஸம்ருத்தியையுடைத்தான வயல்சூழ்ந்த. [குட்டநாட்டுத் திருப்புலியூர்] குட்டநாடென்று அந்நாட்டுக்குப் பேர். [அருமாயன்] பெறுதற்குரிய ஆச்சர்யபூதன். [பேரன்றிப் பேச்சிலள்] பர வ்யூஹ விபவங்களுக்கு வாசகமான திருநாமங்களைச் சொல்லுகிறிலள். அல்லாத உகந்தருளின நிலங்களில் நிற்கிறவர்கள்பேரும் சொல்லுகிறிலள். [அன்னைமீர் இதற்கென் செய்கேனே] 'அவர்களோடொக்கத் தானும் இப்போதறிந்து சொல்லுகிறாள்' என்னுமிடந்தோற்ற, இதுக்கு நான் எத்தைச்செய்வேனென்கிறாள்.

**அன்னைமீர்! இதற்கென்செய்கேன்? அணிமேருவின் மீதுலவும்***
**துன்னுசூழ்சுடர் ஞாயிறும் அன்றியும்பல்சுடர்களும்போல்***
**மின்னுநீள் முடியாரம் பல்கலன் தானுடையெம்பெருமான்***
**புன்னையம்பொழில்சூழ் திருப்புலியூர்புகழுமிவளே. (2)**

ஒ.—இரண்டாம்பாட்டில், எம்பெருமானுடைய ஆபரணசோபையிலே அகப்பட்டாளென்கிறாள். [அணிமேருவென்று தொடங்கி] - அத்யந்தவிலக்ஷணமான மேருவிலே உலாவாநிற்பதுஞ்செய்து, காண்கிற அளவன்றிக்கே நிரந்தரமாகச்சூழப்பட்ட தேஜஸ்ஸையுடைய விலக்ஷணனான ஆதித்யனும், மற்றும் அப்படி இருக்கிற நக்ஷத்ராதிகளையும் போலே. [எம்பெருமான்] - ப்ரீத்யுக்தி.

இ.—இரண்டாம்பாட்டில், அழகைச்சொல்லுங்காட்டில் ஸம்ச்லேஷம் வ்ருத்தமாகவேணுமோ? அகம்பந சுக ஸாரணாதிகளும் 'ஸ்ரீமதா ராஜராஜேந லங்காயாமபிஷேசித:' என்றிலர்களோ? என்ன, பிராட்டி தானெப்பித்த ஒப்பனைக்குத் தோற்று ப்ரீதியாய்ச் சொல்லுமாபோலேயன்றோ இவள்வார்த்தை! என்கிறான். அவனுடைய ஆபரணசோபையிலே அகப்பட்டாளென்கிறாள். [அன்னைமீர் இதற்கு என்செய்கேன்] - நீங்கள் கற்பித்திலிகோள், நான் கற்பித்திலேன்; இதுக்கு நான் எத்தைச்செய்வேன்? [அணிமேருவின் இத்யாதி] - அழகிதான மேருவின்மேலே ஸஞ்சரியாநிற்பானுமாய், காண்கிற அளவன்றிக்கே நெருங்கிச் சூழ்ந்த தேஜஸ்ஸையுடைய விலக்ஷணனான ஆதித்யனும். [அன்றியும் பல்சுடர்களும் போல்] - மற்றும் அப்படியே இருக்கிற நக்ஷத்ராதிதேஜ:பதார்த்தங்களும்போலே. [மின்னுநீண்முடி] - ''துன்னுசூழ் சுடர் ஞாயிறு'' என்ற திருவபிஷேகம். [ஆரம்] - ''அஞ்சுடர் மதியம்பூண்டு'' என்கிறபடியே திருவாரம். [பல்கலன்] - அல்லாத திருவாபரணங்களும். [எம்பெருமான்] - ப்ரீத்யுக்தி. இவ்வம்சம் பொய்யாகாத படி இருந்த என்நாயன். [புன்னையம்பொழில் சூழ்] - அழகிய புன்னைப்பொழில் சூழ்ந்த ஊர். அவ்வூரில் சோலைவாய்ப்பையன்றோ இவள் புகழுகிறது. [திருப்புலியூர் புகழுமிவளே] - பிள்ளாய்! இவ்வூரில் வாசி எங்கே அறிந்தாள்; அவனுடைய ஆபரணசோபையோபாதி அவ்வூரில் சோலையிலும் அவ்வூரிலும் குமிழிநீருண்டாளாய்த் தோற்றுகிறதில்லையோ இவள்வார்த்தையாலே.

ஈடு.—இரண்டாம்பாட்டு. அவனுடைய ஆபரணசோபையில்அகப்பட்டாளென்கிறாள்.

[அன்னைமீர் இதற்கென்செய்கேன்] நீங்கள் கற்பித்திலிகோள்; நான் கற்பித்திலேன்; இதுக்கு நான் எத்தைச்செய்வேன்? [அணி இத்யாதி] அழகிதான மேருவின் மேலே ஸஞ்சரியாநிற்பானுமாய், காண்கிறவளவன்றிக்கே நெருங்கிச் சூழ்ந்த தேஜஸ்ஸையுடைய விலக்ஷணனான ஆதித்யனும். [அன்றியும்பல்சுடர்களும்போல்] மற்றும் அப்படியேயிருக்கிற நக்ஷத்ராதிதேஜ:பதார்த்தங்களும்போலே. [மின்னுநீண்முடி] ''துன்னுசூழ்சுடர்ஞாயிறு'' என்றுசொன்ன திருவபிஷேகம், [ஆரம்] ''அஞ்சுடர் மதியம்பூண்டு'' என்கிறபடியே திருவாரம். [பல்கலன்] அல்லாத திவ்யாபரணங்கள். [எம்பெருமான்] ப்ரீத்யுக்தி. இவ்வம்சம் பொய்யாகாதபடி யிருந்த என்நாயன். [புன்னையம் பொழில்சூழ்] (அழகியபுன்னைப்பொழில் சூழ்ந்த அவ்வூரில்) சோலைவாய்ப்பை யன்றோ இவள் சொல்லுகிறது. சோலையிலே கலந்தார் வார்த்தையாயன்றோ இருக்கிறது. [திருப்புலியூர் புகழுமிவளே] பிள்ளாய்! இவ்வூர்வாசி எங்கேயறிந்தாள்? அவனுடைய ஆபரண சோபையோபாதி அவ்வூரில் சோலையிலும் அவ்வூரிலும் குமிழிநீருண்டாளாய்த் தோற்றுகிறதில்லையோ இவள் வார்த்தையாலே.

**புகழுமிவள்நின்றிராப்பகல் பொருநீர்க்கடல்தீப்பட்டு*எங்கும்**
**திகழும்எரியொடுசெல்வதொப்பச் செழுங்கதிராழிமுதல்***
**புகழும்பொருபடையேந்திப் போர்புக்கசுரரைப்பொன்றுவித்தான்***
**திகழுமணிநெடுமாடநீடு திருப்புலியூர்வளமே. (3)**

ஒ.—மூன்றும்பாட்டில், திருப்புலியூரிலெம்பெருமானுடைய ஆண்பிள்ளைத்தனத்திலே இவள் அகப்பட்டு அவனுடைய சௌர்யாதிகளுக்கு வாசகமான திருநாமங்களைப் பெருங்கீர்த்தியோடே பேசா நின்றாளென்கிறாள். [இவள்] - விரப்பாடுகள் அறிந்து ஈடுபடும் பருவமன்றிக்கேயிருக்கிற இவள். [பொருநீர்க்கடலென்று தொடங்கி] - அலை எறியாநின்றுள்ள கடல் நெருப்புக்கொளுந்தி பரப்பு மாறின அத்யுஜ்ஜ்வலமான எரியோடேகூட நடந்து செல்லுமாபோலே. [செழுங்கதிராழிமுதல் புகழும் பொரு

படையேந்தி] - மிக்கிருந்துள்ள ஒளியையுடைத்தாய், சத்ருக்களும் புகழும்படியான திருவாழிமுதலான பொருகைக்கு ஸாதநமான திவ்யாயுதங்களை ஏந்தி. பொன்றுவிக்கை - முடிக்கை. வளம் - அழகு.

இ.—மூன்றாம்பாட்டில். ''பர்த்தாரம் பரிஷஸ்வஜே'' என்னுமாபோலே அவன் ஆண்பிள்ளைத்தனத்திலே தோற்று, அந்த சௌர்யவீர்யாதிகளைப் பெருங்கிளர்த்தியோடே பேசாநின்றாள் என்கிறாள். [புகழுமிவள் நின்றிராப்பகல்] - நின்றுபுகழும் வீரவாசி அறிந்துபடும் பருவமன்றிக்கே இருக்கிற இவள், கேட்டார்வாய் கேட்டு ஒருகால் சொல்லிவிட்டாளோ? அஹோராத்ரம் நின்று வாய்புலற்றாநின்றாள். [புகழும்] - நெஞ்சாலே மதித்துவிட்டவளவோ? வரிலை குடிபோய் விட்டுப் புகழ்கிறிலளோ? [பொருநீர்க் கடல் தீப்பட்டு] - திரைக்கிளர்த்தியாலே அலையெறிகிற நீரையுடைய கடல் நெருப்புக்கொளுந்தி. [எங்கும் இத்யாதி] - பரப்புமாறிக்கொண்டு ஜ்வலியாநின்ற எரியோடேகூட நடந்துசெல்லுமாபோலே. [புகழும் பொருபடையான செழுங்கதிராழிமுதல் - ஏந்தி] ''ஹேதிபி ச்சேதநாவத்பிருதீரிதஜயஸ்வநம்'' என்கிறபடியே திவ்யாயுதங்கள்தான் அவனைப் புகழாநிற்கும் என்று ஆளவந்தார்நிர்வாஹம். ''சத்ரோ:ப்ரக்யாதவீர்யஸ்ய ரஞ்ஜநீயஸ்யவிக்ரமம:'' என்கிறபடியே 'கையும் ஆயுதப்பொருத்தமும் இருந்தபடி என்? என்று சத்ருக்கள் புகழும்படியைச் சொல்லுகிறது என்று எம்பெருமானார் அருளிச்செய்வர். [பொருபடை] - யுத்தோத்யுக்தமான ஆயுதம். [செழுங்கதிர்] - மிக்க தேஜஸ்ஸையுடைய திருவாழிமுதலான திவ்யாயுதங்களை ஏந்தி. [போர்புக்கு அசுரரைப் பொன்றுவித்தான்] - ஸாயுதனாய் யுத்தத்திலேபுக்கு, துஷ்ப்ரக்ருதிகளை முடித்தான். பொன்றுவிக்கை - முடிக்கை. [திகழுமித்யாதி] - உஜ்ஜ்வலமான மணிகளையுடைத்தாய், ஓங்கின மாடங்களை யுடைத்தாய், கல்பாவதியான திருப்புலியூரில் அழகைப் புகழும். [வளம்] - அழகு. எதிரிகளுக்குக் கிட்டவொண்ணாமைக்கு அவன்தான் வேண்டா; அவ்வூரே அமையுமென்கை. திருவயோத்யையைப்போலேயும், ''அயோத்யாzபராஜிதா'' என்கிற பரமபதத்தைப் போலேயுமாயிற்று இவள் இவவூரை நினைத்திருப்பது.

ஈடு—மூன்றாம்பாட்டு. ''ஒப்பனையழகு ருஷிகளும் சொல்லார்களோ, இது கலவிக்கு ஸூசகமாகவேணுமோ'' என்ன; *பர்த்தாரம் பரிஷஸ்வஜே* என்று வீரவாசிகண்டு அணைக்கும் பிராட்டிபாசுரமாயன்றோ இவள்வார்த்தையிருக்கிறதென்கிறாள்.

[புகழுமிவள் நின்றிராப்பகல்] (இவள் - இராப்பகல் - நின்று புகழும்) வீரவாசியறிந்துபடும் பருவமன்றிக்கேயிருக்கிற இவள், கேட்டார்வாய் கேட்டு ஒருகால் சொல்லிவிட்டாளோ, அஹோராத்ரம்நின்று வாய்புலற்றாநின்றாள். [புகழும்] நெஞ்சாலே நினைத்துவிட்ட அளவேயோ? வரிலை குடிபோய் வாய்விட்டுப்புகழுகிறாளல்லளோ? [பொருநீர்க்கடல்தீப்பட்டு] பொராநின்றுள்ள திரையையுடைத்தான கடல் நெருப்புக்கொளுந்தி. [எங்கும் திகழுமெரியோடு செல்வதொப்ப] பரப்புமாறிக்கொண்டு ஜ்வலியாநின்றுள்ள நெருப்போடேகூட நடந்து செல்லுமாபோலேயாயிற்று, ஆயுதங்களால் வந்த புகரும் திருமேனியுமிருக்கும்படி. [புகழும்பொருபடையான - செழுங்கதிராழிமுதல் - ஏந்தி] *ஹேதிபிச்சேதநாவத்பி ருதீரிதஜயஸ்வநம்* என்று திவ்யாயுதங்கள்தான் அவனைப் புகழும்படியாதல்; *சத்ரோ: ப்ரக்யாதவீர்யஸ்ய ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை*: என்கிறபடியே 'கையும் ஆயுதமுமாய்ப் பொருத்தமிருந்தபடியென்?' என்று சத்ருக்கள் புகழும்படியைச் சொல்லுகிறது'' என்று எம்பெருமானார் அருளிச்செய்யும்படி. [பொருபடை] யுத்தோத்யுக்தமான ஆயுதம். [செழுங்கதிர்] மிக்க தேஜஸ்ஸையுடைத்தான திருவாழி முதலான திவ்யாயுதங்களையேந்தி. [போர்புக்கசுரரைப்பொன்றுவித்தான்] ஸாயுதனாய் யுத்தத்திலேபுக்கு துஷ்ப்ரக்ருதிகளை முடித்தான். பொன்றுவிக்கை - முடிக்கை. [திகழும் இத்யாதி] உஜ்ஜ்வலமான மாணிக்கங்களையுடைய ஓங்கின மாடங்களையுடைத்தாய், கல்பாவதியான திருப்புலியூரிலழகை - புகழும். வளம் - அழகு. எதிரிகளுக்குக் கிட்டவொண்ணாமைக்கு அவன்தான் வேண்டா; அவ்வூரேயமையும். பிராட்டி, ஸ்ரீமிதிலையை விட்டு *ராகவஸ்ய நிவேசநே* என்று திருவயோத்யையைப் புகழுமாபோலே, இவள் திருநகரியைவிட்டுத் திருப்புலியூர்ப்புகழே புகழாநின்றாள். *அயோத்யாzபராஜிதா* என்கிற பரமபதத்தை நினைத்திருக்குமாபோலேகாணும் இவள் அவ்வூரை நினைத்திருப்பது. ''மரக

வைகுந்தங்காண்பதற்கு என் மனமேகமெண்ணுமிராப்பகலின்றியே" என்றிறே அங்கும் இவர்பாசுரம்.

**ஊர்வளங்கிளர்சோலையும் கரும்பும்பெருஞ்செந்நெலுஞ்சூழ்ந்து***
**ஏர்வளங்கிளர்தண்பணைக் குட்டநாட்டுத்திருப்புலியூர்***
**சீர்வளங்கிளர்மூவுலகுண்டுமிழ் தேவபிரான்***
**பேர்வளங்கிளர்ந்தன்றிப்பேச்சிலள் இன்றிப்புனையிழையே. (4)**

ஒ.—நாலாம்பாட்டில், திருப்புலியூரில் எம்பெருமானுடைய குணவத்தையிலே இவள் ஈடுபட்டாளென்கிறாள். [ஊர்வளங்கிளர் சோலை] - தன்னைக்காணவே ஊரில் ஸம்ருத்தியெல்லாம் தோற்றும்படியான சோலை. [ஏரென்று தொடங்கி] - மிக்கிருந்துள்ள ஏரியினுடைய ஸஞ்சாரத்தையுடைத்தான அழகிய நீர்நிலத்தையுடைய குட்டநாட்டுத் திருப்புலியூரில் ஸமஸ்தலோகங்களையும் உண்பது உமிழ்வதாய்அத்தாலே தன்னுடைய கல்யாணகுணங்கள் மிகவும் நிறம்பெறும்படியாவதுஞ்செய்து, அயர்வறுமமரர்கள் அதிபதியானவனுடைய சேஷ்டிதங்களுக்கு வாசகமான திருநாமங்கள் பலவற்றைக் கிளர்ந்து பேசுமித்தனைபோக்கி மற்றொன்றும் பேசுகிறிலள்; [இப்புனையிழை] - இவ்விலக்ஷணையான பெண்பிள்ளை.

இ.—நாலாம்பாட்டில், வெறும்ஆண்பிள்ளைத்தனமேயன்றிக்கே, குணவானாய், ஆபத்ஸகனுமிருக்கிறவனுடைய குணதிக்யத்திலே இவள் ஈடுபட்டாளென்கிறாள். [ஊர்வளங்கிளர்சோலையும்] - ஊரில் அழகெல்லாம் தன்னைக்கண்டபோதே தோற்றும்படியான சோலையென்னுதல்; ஊர்க்குச் சிறப்பாய்ச் சோலைக்குள்ள நன்மைகளெல்லாமுடைய சோலையென்னுதல். வயலடங்கக் கரும்பும், அதுக்கு கிழல் செய்யும் செந்நெலும் சூழ்ந்துகிடக்கும். [ஏர்வளங்கிளர்] - ஏராலுண்டான அழகையுடைத்தானவென்னுதல், ஏரினுடைய ஸமுதாயத்தைச் சொல்லுதல். அதாவது - உழுவது நடுவதாய்ச் செல்லாகிற்கை. [தண்பணை] - மருதநிலமென்னுதல், அழகிய நீர்நிலமென்னுதல். மருதநிலமென்றத்தால் - வயலைச் சொன்னபடி. [சீர்வளங்கிளர் மூவுலகுண்டுமிழ் தேவபிரான்] - குணங்களின் நன்மையடங்கச் செயலிலே தெரியும்படி ஸகலலோகங்களையும் திருவயிற்றிலே வைத்து நோக்கி வெளிநாடுகாண உமிழ்ந்த அயர்வறுமமரர்களதிபதி; தன்மேன்மை பாராதே உபக்ரமிக்குமவனென்கை. [பேர்வளம்] - திருநாமத்தில் அழகைச் சொல்லுதல்; திருநாமங்களடங்கவென்னுதல். குணசேஷ்டிதங்களுக்கு வாசகமான திருநாமங்களைப் பெரியகிளர்த்தியோடே யன்றோ இவள் சொல்லுகிறது? நாம் திருநாமஞ் சொல்லுகிறாப்போலேயோ? கடலோதங் கிளர்ந்தாப்போலேயன்றோ இவள்சொல்லுகிறது. அப்படியல்லது, வேறொன்றைச் சொல்ல மாட்டுகிறிலள். [இன்று] - இவள் தனக்குத்தான் முன்புண்டோ? [இப்புனையிழையே] - திருநாமத்தைச் சொல்லச்சொல்ல ஒருபடி பூண்டாப்போலேயன்றோ இருக்கிறது?

ஈடு.—நாலாம்பாட்டு. வெறும் ஆண்பிள்ளைத்தனமோ போராதே, ஆபத்ஸகனுமாக வேணுமேயென்ன, அக்குறைதானுண்டோ இவனுக்கு என்கிறாள்? புனல்தரு புணர்ச்சியையன்றோ இவள் வாய்புலற்றுகிறது.

[ஊர்வளங்கிளர்சோலையும்] ஊரில் ஸம்பத்தைக் கோட்சொல்லிக்கொடுக்கும் சோலையென்னுதல்; ஊர்களுக்கு இட்டுச்சொல்லும் சிறப்புக்களைத் தெரிவிக்கும் சோலையென்னுதல்; [கரும்பும் பெருஞ்செந்நெலும்சூழ்ந்து] வயலடங்கக் கரும்பும், அதுக்கு நிழல் செய்யும் செந்நெலும் சூழ்ந்துகிடக்கும். [ஏர்வளங்கிளர்] ஏராலுண்டான அழகையுடைத்தாயென்னுதல், ஏரினுடைய ஸமுதாயத்தைச் சொல்லிற்றாதல். அதாவது உழுவது நடுவதாய்ச்செல்லாநிற்கை. [தண்பணை] மருதநிலமென்னுதல், அழகிய நீர்நிலமென்னுதல், மருதநிலமென்றத்தால், வயலைச்சொன்னபடி [சீர்வளங்கிளர் மூவுலகுண்டுமிழ்] குணங்களின் நன்மையடையச் செயலிலே தெரியும்படி, ஸகல லோகங்களையும் வயிற்றிலேவைத்து, வெளிநாடு காணவுமிழ்ந்த அயர்வறுமமரர்களதிபதி. [பேர்வளம்] திருநாமங்களினுடைய அழகைச் சொல்லுதல்,

திருநாமங்களையடங்க வென்னுதல். [ஒளர்ந்தன்றிப் பேச்சிலள்] குணசேஷ்டிதங்களுக்கு வாசகமான திருநாமங்களை, கடல்ஒளர்ந்தாப்போலே பெரியஒளர்த்தியோடே யன்றோ இவள் சொல்லுகிறது. நாம் திருநாமம் சொல்லுமாபோலேயோ இவள் சொல்லுகிறது, [இன்று] இவ்வேறுபாடும் நன்மையும் கேற்றில்லைகிடீர். [இப்புனையிழையே] திருநாமம் சொல்லச் சொல்ல ஒருபடி ஆபரணம் பூண்டாப்போலே இராநின்றாள்.

**புனையிழைகளணிவும் ஆடையுடையும் புதுக்கணிப்பும்***
**நினையும்நீர்மையதன்றுஇவட்கிது நின்றுநினைக்கப்புக்கால்***
**சுனையினுள்தடந்தாமரைமலரும் தண்திருப்புலியூர்***
**முனைவன்மூவுலகாளி அப்பன்திருவருள்மூழ்கினளே. (5)**

ஒ.—அஞ்சாம்பாட்டில், அவனுடைய ஸௌந்தர்யாதிகளை நாமும் பேசுகிறிலோமோ? இவளும் அவ்வோபாதி பேசினளானலாகாதோவென்ன; இவள் வடிவிருக்கிறபடி கண்டோமுக்கு அவன்ஐச்வர்ய குணத்திலே ஈடுபட்டு அவனோடே ஸம்ச்லேஷித்தாள் என்கிறாள். [புனையிழைகளென்று தொடங்கி]- பூணக்கடவ ஆபரணங்கள் பூண்டிருக்கிறபடியும் கூறையுடையும் இவள்வடிவிலேபிறந்த புதுக்கணிப்பும் இவளுக்குப்பிறந்த இவ்வழகுகள் ஆராயவொண்ணுவாகிலும் மிகவும் ஆராய்ந்துபார்க்கில், [திருப்புலியூ ரென்று மேலுக்கு] - திருப்புலியூருக்கு ப்ரதாநனும் அதுக்குமேலே ஸமஸ்த லோகங்களையும் ஆளக் கடவ ஸர்வேச்வரனுடைய ப்ரஸாதத்திலே மூழ்கினாள். அப்பனென்று - தோழி தன்ப்ரீதியாலே சொல்லுகிறாள் மூழ்கினளென்றது - கடல்கொண்டாப்போலே நமக்கு உதவாளென்றவாறு.

இ.—அஞ்சாம்பாட்டில், கீழில் ஸௌந்தர்யம், ஒப்பனை, ஆண்பிள்ளைத்தனம், குணவத்தை, இவை நாமும் பேசுகிறிலோமோ? இவளும், அவ்வோபாதியானலோவென்ன, இவள்வடிவிருக்கிறபடி கண்டோமுக்கு அவன்ஐச்வர்யகுணத்திலே ஈடுபட்டு ஸம்ச்லேஷம் வ்ருத்தமாயிற்று என்கிறாள். [புனையிழைகளணிவும்] பூணக்கடவ ஆபரணங்களைப் பூண்டிருக்கிறபடியும், நாம் பூட்டினவையா யிருக்கச்செய்தே அப்படி குறிக்கோளுண்டாயிருந்ததோ? [ஆடையுடையும்]-கூறையுடையும்; முகத்தலை பார்த்து உடுத்ததாயோவிருக்கிறது? [புதுக்கணிப்பும்] - முன்புள்ளவற்றுக்குப் பிறந்தவாசியன்றிக்கே இவள்வடிவிலே பிறந்த புதுமைகளும். [நின்று நினைக்கப் புக்கால் - நினையும் நீர்மையதன்றிவட்கிது]- உபக்ரமித்து விடுகையன்றிக்கே காலமெல்லாம் ஆராயப்புக்காலும், இவளுக்குப் பிறந்தவழகுகள் நினைக்கப்போகாது. "யதோ வாசோ நிவர்த்தந்தே" என்கிற விஷயத்தைப் பரிச்சேதிக்கிலும் இவள்படி பரிச்சேதிக்கநிலமன்று. இவையெல்லாவற்றாலும் நீ பரிச்சேதித்த அம்சம் ஏதென்ன?—[அப்பன்திருவருள்மூழ்கினள்]. [சுனையினுள்தடந்தாமரைமலரும்] - பொய்கைகளில் தாமரைமலரும். பொய்கைகளில் தாமரை கண்செறியிட்டாப்போலே பூத்துமலர்ந்து நிற்கும் ஊர். அவ்வூரில் பதார்த்தங்கள் பிறர்க்கு இடங்கொடாதென்கிறாள். [திருப்புலியூர்முனைவன்] - அவ்வூருக்கு ப்ரதாநன். [மூவுலகாளி] - அவ்வளவன்றிக்கே ஸமஸ்தலோகங்களுக்கும் நிர்வாஹகன். [அப்பன்]-"ஐச்வர்யத்தாலும் குறைவறப்பெற்றேன்" என்று தன்ப்ரீதியாலே சொல்லுகிறாள்: அவனுடைய. [திருவருள் மூழ்கினள்] - கடல்கொண்டவஸ்துவையன்றோ நீங்கள் மீட்கப்பார்க்கிறது?

ரு.—அஞ்சாம்பாட்டு. வெறும் ஆபத்ஸகத்வமே போருமோ? இவளுக்குத்தக்க ஐச்வர்யமு முண்டாகவேணுமேயென்ன; அதுவுமுண்டென்கிறாள்.

[புனையிழைகளணிவும்] ஆபரணங்கள் நாம் பூட்டினாப்போலே யிருந்ததோ? [ஆடையுடையும்] முகத்தலையறிந்து உடுத்ததாயிருந்ததோ? [புதுக்கணிப்பும்] நீர்பாய்ந்த வயல்போலே இவள்வடிவிலே பிறந்த செவ்வி பாரீகோள்! [நினையும் நீர்மையதன்று இவட்கிது நின்று நினைக்கப்புக்கால்] (நின்று நினைக்கப்புக்கால் - நினையும் நீர்மையதன்று இவட்கிது) உபக்ரமித்து விடுகையன்றிக்கே, காலதத்த்வமுள்ளதனையும் நின்று ஆராய்ப்புக்காலும்.

இவளுக்குப் பிறந்த இவ்வழகுகள் நினைக்கப்போகாது. *யதோ வாசோ நிவர்த்தந்தே* என்கிறவிஷயத்தைப் பரிச்சேதிக்கலும், இவள்படி பரிச்சேதிக்கப்போகாது. இவையெல்லாவற்றாலும் நீ பரிச்சேதித்த அம்சமேதென்ன? [அப்பன் திருவருள் மூழ்கினள்]. [கனையினுள் தடந்தாமரை மலரும்] ஒரு பூவே தடாகத்தைக் கண்செறியிட்டாப்போலே மலரும். அவ்வூரில் பதார்த்தங்கள் பிறர்க்கு இடங்கொடாதென்கிறாள். இவளுக்குப் புறப்பு போக்கில்லை. [திருப்புலியூர்முனைவன்] அவ்வூருக்கு ப்ரதானன். [மூவுலகாளி] ஸமஸ்தலோகங்களுக்கும் நிர்வாஹகன். ஐச்வர்யத்துக்குப் புறம்பு ஒருவரைத் தேடிப்போகவேண்டா. [அப்பன்] "ஐச்வர்யத்தாலும் குறைவறப்பெற்றேன்?" என்று தன்ப்ரீதியாலே சொல்லுகிறாள். [திருவருள் மூழ்கினளே] கடல்கொண்ட வஸ்துவை எங்ஙனே மீட்கப்பார்க்கிறபடி? அருட்கடலிலே மூழ்கின இவளை மீட்கலாமோ உங்களாலே?

**திருவருள்மூழ்கிவைகலும் செழுநீர்நிறக்கண்ணபிரான்***
**திருவருள்களுஞ்சேர்ந்தமைக்கு அடையாளந்திருந்தவுள***
**திருவருளருளால் அவன்சென்றுசேர் தண்திருப்புலியூர்***
**திருவருள்கமுகொண்பழத்தது மெல்லியல்செவ்விதழே. (6)**

ஒ.—ஆறும்பாட்டில், இவளுடைய வடிவில் வேறுபாடு, லீலாவிநோதத்தாலும் இவள்பருவத்தாலும் பிறவாதோவென்னில்?—எம்பெருமானுடைய ஔதார்யகுணத்திலே யகப்பட்டு அவனோடே ஸம்ச்லேஷித்தமைக்கு அடையாளம் வ்யக்தமாக உண்டென்கிறாள். [திருவருளென்று தொடங்கி] - ச்ரமஹரமான திருநிறத்தையுடையனுப் உபகாரசீலனான க்ருஷ்ணனுடைய ப்ரஸாதத்திலே முழுகி நாடோறும் அவனுடைய விஷயீகாரங்களைப் பெற்றமைக்கு அடையாளங்கள் வ்யக்தமாக உள. [திருவருளருளாலென்று மேலுக்கெல்லாம்] - குறை குண நிரூபணம்பண்ணாதே, எல்லாரையும் விஷயீகரிக்கைக்காக அவன்தானே சென்று சேரும்படியாய் ஒருகாரியப்பாடு வேண்டாதே தானே நிரதிசய போக்யமாயிருந்த திருப்புலியூரில் அவனுடைய ப்ரஸாதத்தாலே வளருகிற கமுகினுடையசெவ்விப்பழம் போலே யிராநின்றது, ம்ருதுஸ்வபாவையான இவளுடைய அதரம்.

இ.—ஆறும்பாட்டில், இவள்வடிவில் வேறுபாடு லீலாவிநோதத்தாலும் இவள்பருவத்தாலும் பிறவாதோவென்னில்; அவனுடைய ஔதார்யகுணத்திலே யீடுபட்டு ஸம்ச்லேஷித்தமைக்கு அடையாளம் வ்யக்தமாக உண்டென்கிறாள். [வைகலும் திருவருள்மூழ்] – அநேககாலம் அவன்ப்ரஸாதத்திலே யவகாஹித்து நாம் கண்டத்தையறியும் இத்தனையன்றே? எதிர்சூழல்புக்கு எத்தனை காலமுண்டு செல்லுகிறதென்றறிந்தோமோ? [செழுநீர் நிறக்கண்ணபிரான்] - ச்ரமஹரமான வடிவையும் சீலத்தையுமுடையவன். அவன்றனக்கு ஸர்வஸ்வம்மான வடிவிலும் குணத்திலும் அகப்பட்டமை தோற்றியன்றேயிருக்கிறது. [திருவருள்களும் சேர்ந்தமைக்கடையாளம் திருந்த உள] - அவன்விஷயீகாரங்களையும் பெற்றமைக்கு அடையாளம் வ்யக்தமாக உள. நீ இதென்கொண்டு அறிந்தாயென்ன, [திருவருளருளால்]- குறைகுணநிரூபணம் பண்ணாதே விஷயீகரிக்கையாகிற ஸ்வபாவத்தை உபரிக்கைக்காக, அவன்தானே சென்று பொருந்தும் ச்ரமஹரமான வூர். 'திருவருட்கமுகு' என்று சிலவுண்டு: நீரால் வளருமதன்றிக்கே பிராட்டியும் தானும் கடாக்ஷிக்க அதுவே நீராக வளருமவை. [மெல்லியல் செவ்விதழ் - ஒண்பழத்தது] - ம்ருது ஸ்வபாவையான இவளுடைய அதரம் செவ்விபபழம்போலேயிராநின்றது. இவளுடைய அவயவம் அவ்வூர்க்காயன்றே யிருக்கிறது.

ஈடு.—ஆறும்பாட்டு. ஐச்வர்யமே போருமோ? உதாரனாகவேண்டாவோ? என்ன, அவனுடைய ஔதார்யகுணத்திலே யகப்பட்டு ஸம்ச்லேஷித்தமைக்கு அடையாளம் வ்யக்தமாக உண்டென்கிறாள்.

[வைகலும்-திருவருள்மூழ்கி] அநேககாலம் அவன்ப்ரஸாதத்திலே அவகாஹித்து. நாம் கண்டத்தையறியுமித்தனையிறே. எதிர்சூழல்புக்கு இப்படி பரிமாறித்திரிகிறது எத்தனை

காலமுண்டு. அறிந்தோமோ? [செழுநீர்நிறக் கண்ணபிரான்] ஸௌந்தர்ய ஸௌலப்யங்களைக் காட்டிக்காணும் இவளை இப்படி அகப்படுத்திற்று. [திருவருள்களும் சேர்ந்தமைக்கு] அவனுடைய ப்ரஸாதமெல்லாம் இவ்வாச்ரயமொன்றிலும் வந்துசேர்ந்தமைக்கு. [அடையாளந் திருந்தவுள] அவன்விஷயீகாரம் பெற்றமைக்கு அடையாளம் வ்யக்தமாக உள. (நீ இதென் கொண்டறிந்தாய்? என்ன) [திருவருளருளால்] குறைகுணநிரூபணம் பண்ணாதே விஷயீகரிக்கை யாகிற ஸ்வபாவத்தை உபகரிக்கைக்காக; திருவரு ளருளுகைக்காக. ஆல் - அசை [அவன் சென்று இத்யாதி] கலங்காப் பெருநகரம் கலவிருக்கையாயிருக்கவன்றோ அவன் இங்கு வந்து ஸந்நிஹிதனாயிற்று. [திருவருட்கமுகு] என்று சிலவுண்டு. அதாவது நீராலே வளருகையன்றிக்கே, பெரிய பிராட்டியாரும் ஸர்வேச்வரனுமாகக் கடாக்ஷிக்க அத்தால் வளருவன சில: அதினுடைய அழகிய பழம்போலே யிராநின்றது, ம்ருதுஸ்வபாவையான இவளுடைய அதரம். அவ்வாயிலே யதியலாயன்றோ விருக்கிறது.

மெல்லிலைச்செல்வவண்கொடிப்புல்க வீங்கிளந்தாள்கமுகின்*
மல்லிலைமடல்வாழை யீன்கனிசூழ்ந்துமணங்கமழ்ந்து*
புல்லிலைத்தெங்கினூடு காலுலவுந்தண் திருப்புலியூர்*
மல்லலஞ்செல்வக்கண்ணன் தாளடைந்தாள் இம்மடவரலே. (7)

ஒ.—ஏழாம்பாட்டில், தன்பக்கல் அடங்காமல் அவ்வூரில் ஸ்த்தாவரங்களுங்கூடவெள்ளங்கோத்து அவையுங்கூட பரஸ்பர ஸம்ச்லேஷைகதாரகமாயிருக்கும்படியே பெருகுகிற இவனுடைய ப்ரணயித்வ வெள்ளத்திலே முழுகினாளென்கிறாள். [மெல்லிலையென்று தொடங்கி] - ம்ருதுவான இலையையுடைத் தாய் ச்ரத்தையோடேகூடித் தன்னைக்கொடுக்கும் ஸ்வபாவமான கொடி தழுவ அத்தாலே வளர்ந்து கொண்டு இளகாநின்றுள்ள தாளையுடைய கமுகோடேகூடின பெரிய இலையையும் மடலையுமுடைய வாழை ஈன்ற பழுத்த குலைகள்சூழ்ந்து அத்தாலே வெள்ளமிடாநின்றுள்ள பரிமளத்தையுடைத்தாய், [புல்லிலைத்தெங்கென்று தொடங்கி] - செறிவின் மிகுதியாலே நேரிதான இலையையுடைய தெங்கின் உள்ளே போக்கடியற்று ஸஞ்சரியாநிற்பதுஞ்செய்து இப்படி நிரதிசயபோக்யமான திருப்புலியூரில் மிக்கிருந்துள்ள ஸம்பத்தையுடைய கிருஷ்ணன்திருவடிகளை அடைந்தாள் இந்த முக்தையான பெண் பிள்ளை. [புல்லிலைத் தெங்கென்றது] - சோலையைத்தழுவித் தழைத்திருந்ததெங்கென்றுமாம்.

இ.—ஏழாம்பாட்டில், அருளென்று ப்ரஸ்துதமான ஔதார்யத்தளவன்று; ப்ரணயித்வம் பார்த்தாலும் ஸ்த்தாவரபர்யந்தமாக வசலக்கூடுமென்கிறாள். தன்பக்கல் அடங்காமல் அவ்வூரில் ஸ்த்தாவரங்களுங்கூட பரஸ்பர ஸம்ச்லேஷைகதாரகமாம்படி பெருகுகிறவனுடைய ப்ரணயித்வ வெள்ளத்திலே முழுகினாளென்கிறாள். [மெல்லிலையித்யாதி] - ம்ருதுவான இலையையுடைத்தாய், ச்ரத்தையோடே கூடித் தன்னைக் கமுகுக்கு முற்றூட்டாகக்கொடுக்கும் ஸ்வபாவமான கொடிதழுவ. [வீங்கிளந் தாட்கமுகின்] - கொடி தழுவத்தழுவ வளராநின்று, ஒருகாலைக்கொருகால் இளகாநின்றுள்ளதாளையுடைய கமுகு. 'யஸ்ய ஸாஜநகாத்மஜா - அப்ரமேயம்ஹி தத்தேஜ:'' என்னும் க்ரமத்தாலே "ததேவ பாஹுலதாம் ஸ்கந்தே கோபீ மதுநிகாதிக:''. [கமுகின் மல்லிலைமடல்வாழை] - கமுகோடேகூடின பெரிய இலையையும் மடலையுமுடைய வாழை; வெற்றிலைக்கொடிக்கும் கமுகுக்கும் வெயில் படாமல் நிழல் செய்கிற வாழை. [ஈன்கனி சூழ்ந்து மணங்கமழ்ந்து] - வாழைகளீன்ற நெருங்கின பழத்தாறுகளைக் காற்று விளைவதறியாமையாலே வந்து புகுந்து, பரிமளத்தின் லோபத்தாலே பலகால் சூழவந்து பரிமளத்தை யெறட்டுக்கொண்டு. [புல்லிலைத் தெங்கினூடு காலுலவும்] - செறிவின் மிகுதியாலே நெருங்கின இலையையுடைய தெங்கினுள்ளே யுலாவாநின்றது; விளைவதறியாதே புகுந்து பரிமளித்த வாழைச் சோலையிலே நெருக்குப்பட்டு அல்பம் அவகாசமுள்ள தென்னஞ்சோலையிலே புறப்பட்டுப் போக்கடியற்று ஸஞ்சரியாநின்றது. புல்லிலை-புல்லப்பட்ட இலை; அந்யோந்யம் தழுவப்பட்ட இலையென்றுமாம்; வாழை யிலையோடே தழுவின இலையையுடைய தெங்கென்றுமாம். [தண்திருப்புலியூர்] தெங்கும் கமுகும் வாழையு

மான சோலைநெருக்கத்தாலே ச்ரமஹரமான திருப்புலியூர். [மல்லலஞ்செல்வக் கண்ணன்]- நிரவதிகமாய் அழகிதான ஸம்பத்தையுடைய கிருஷ்ணன் [தாளடைந்தாள்] - ப்ரணயித்வ குணத்திலே தோற்றுத் திருவடிகளைப்பற்றினாள். [இம்மடவரல்] - இம்முக்தையான பெண்பிள்ளை. முன்புஎனக்கு பவ்யையான இவள் என்னால் விலக்கவொண்ணாத தேசத்திலே போய்ப்புக்காள்.

ஈடு.—ஏழாம்பாட்டு. கேவலம் உதாரனாகப்போராதே, ப்ரணயித்வகுண முண்டாக வேணுமேயென்ன; அவ்வூரில் ஸ்தாவரங்களுங்கூடப் பரஸ்பரம் ஆச்ரயமாம்படியன்றோ அவனுடைய ப்ரணயித்வகுணமிருந்தபடி யென்கிறாள்.

[மெல்லிலை இத்யாதி] ம்ருதுஸ்வபாவமான இலையையுடைத்தாய், ச்ரத்தையையுடைத் தாயிருக்கிற வண்கொடியுண்டு - உதாரமானகொடி: தன்பர்த்தாவான கமுகுக்குத் தன்னுடம்பை முற்றூட்டாகக்கொடுக்கும்போலே. [விங்கிளந்தாள்கமுகின்] கொடி தழுவத் தழுவ வளராநின்று, ஒருகாலைக்கொருகால் இளகாநின்றுள்ள தாளையுடைய கமுகு. *யஸ்ய ஸா ஜநகாத்மஜா - அப்ரமேயம்ஹி தத்தேஜ:* என்னும் ந்யாயத்தாலே. *ததௌ பாஹுலதாம் ஸ்கந்தே கோபீ மதுநிகாதிந:*. [கமுகின் மல்லிலைமடல்வாழை] கமுகோடேகூடின பெரிய இலையையும் மடலையுமுடைய வாழை. வெற்றிலைக்கொடிக்கும் கமுகுக்கும் வெயில் தட்டாதபடி நிழல் செய்து நிற்குமாயிற்று வாழை. [ஈன்கனிசூழ்ந்து] பழத் தாறுகள் தெற்றிக் கிடக்குமாயிற்று. [மணம்கமழ்ந்து] காற்றானது விளைவதறியாதேபுக்கு, பரிமளத்தில் லோபத்தாலே அங்கே யிங்கே சுழித்து, பரிமளத்தை எடுத்துக்கொண்டு வாழைநெருக்கத்தாலே நெருக்குப்பட்டு அல்பாவகாசமுள்ள தெங்கின் சோலையிலே புறப்பட்டு ஸஞ்சரியாநிற்குமாயிற்று. [புல்லிலை] புல்லப்பட்ட இலை. அந்யோந்யம் தழுவப்பட்ட இலையையுடைய தெங்கென்னுதல், வாழை யிலையோடே தழுவின இலையையுடைய தெங்கென்னுதல்; சோலைநெருக்கத்தாலே சேரிதான இலையென்னுதல். [மல்லலம் செல்வக்கண்ணன்] நிரவதிகமாய் அழகிதான ஸம்பத்தையுடைய க்ருஷ்ணன். [தாளடைந்தாள்] ப்ரணயித்வகுணத்துக்குத் தோற்றுத் திருவடிகளைப் பற்றினாள். [இம்மடவரல்] முன்பு எனக்கு பவ்யையாய்ப் போந்த இவள்மீட்க வொண்ணாதபடியானாள்.

**மடவரலன்னைமீர்கட்கு என்சொல்லிச்சொல்லுகேன்* மல்லைச்செல்வ**
**வடமொழிமறைவாணர் வேள்வியுள்நெய்யழல்வான்புகைபோய்***
**திடவிசும்பிலமரர்நாட்டைமறைக்கும் தண்திருப்புலியூர்***
**படவரவணையான்தன் நாமமல்லால் பரவாளிவளே. (8)**

ஒ.—எட்டாம்பாட்டில், திருப்புலியூரில் எம்பெருமானுடைய வ்ருத்தவத்தையாலே இவள் வசீக்ருதையானாளென்கிறாள். [மடவரல்] - மடவந்தபடி. பற்றிற்றுக் கைவிடாமையும். [மல்லைச் செல்வமென்று மேலுக்கு] - மிக்கிருந்துள்ள ஸ்ரீயையுடையராய் ஸம்ஸ்க்ருதபாஷையும் வேதங்களும் தாங்களிட்ட வழக்கான ப்ராஹ்மணருடைய பகவத் ஸமாராதநஸ்வரூபமான யாகங்களிலே ஹோமம் பண்ணின நெய்கள்பட்ட அக்னிகளில் நின்றும் புறப்படாநின்றுள்ள மிக்கிருந்துள்ள புகை வ்யவஸ்த்திதஸ்வபாவமான ஆகாசத்தில் தேவலோகத்தை மறைக்கும் நிரதிசயபோக்யமான திருப்புலியூரில் தன்னோட்டை ஸ்பர்சத்தாலே பணம் விரிந்திருந்துள்ள திருவநந்தாழ்வானைப் படுக்கையாக வுடையவனுடைய திருநாமமல்லது சொல்லுகிறிலள். ஸம்ச்லேஷதசையில் படுக்கையழகை நினைத்துச் சொல்லாநின்றாளென்று கருத்து.

இ.—எட்டாம்பாட்டில், அவன்வ்ருத்தவத்தையிலே வசீக்ருதையானாளென்கிறாள். "கர்மணை வஹி ஸம்ஸித்திம் ஆஸ்த்திதா ஜநகாதய:" என்று குடிப்பிறப்பாலே வ்ருத்தருசியுடையளாகையாலே, ப்ரணயித்வத்திற்காட்டில் இவள் ஆசாரத்திலேயிறே வசீக்ருதையாவது. [மடவரல்] - மட வந்தபடி. இவள் எனக்கு பவ்யையானபடியை: பற்றிற்றுவிடாதபடியை யென்றுமாம். [அன்னை

மீர்கட்கு இத்யாதி] - என்கையிலே காட்டித்தந்த உங்களுக்கு என்னபாசுரத்தைவிட்டுச்சொல்லு வேன்? எனக்கு பவ்யை என்னவோ? நானும் கூட்டென்னவோ? என்னைக் கடந்தாளென்னவோ? [மல்லைச்செல்வம்] - மிக்க ஸம்பத்தையுடையராய். [வடமொழி மறைவாணர்இத்யாதி] - ஸம்ஸ்க்ருத பாஷையும் வேதங்களும் தாங்களிட்ட வழக்காய் வ்யாஸபதம் செலுத்தவல்ல ப்ராஹ்மணர் ஸமாராதந ரூபமான யாகங்களிலே ஹோமம் பண்ணின நெய்யாலே ஜ்வலித்த அக்கிகளினின்றும் புறப்பட்ட மிக்க புகையானது. [திடவிசும்பிலமரர் நாட்டைமறைக்கும்] - வ்யவஸ்த்தித ஸ்வபாவமான ஆகாசத்தில் தேவ லோகத்தை மறைக்கும். வைமாநிகர்க்கு அப்ஸரஸ்ஸுக்களை முகம் பார்க்கவொண்ணாதபடி மறைக்கும். [தண்திருப்புலியூர்] - இப்படி ஸமாசார ஸ்ரீயையுடைய வூர். ''ஸங்கரஸ்யசகர்த்தா ஸ்யா முபஹந்யாமிமா: ப்ரஜா:'' என்றிறே இவன்தன்படி. [படவரவித்யாதி] ஸ்வஸ்பர்சத்தாலே விகஸிதபணனான திருவநந் தாழ்வானைப் படுக்கையாக வுடையவனுடைய திருநாமமல்லது வாய்புலற்றுகிறிலள். நான் அருகேயிருக்க ஸம்ச்லேஷதசையில் படுக்கையழகையே வாய்புலற்றுகின்றாள். ''தோழி'' என்று ஸம்போதிக்கிலன்றே இவளை யென் வசமாக்குவது. [இவளே] - என்னையொழிய வேறொன்றை ப்ரவர்த்திக்கவறியாத இவள்.

ஈடு.—எட்டாம்பாட்டு. வெறும் ப்ரணயித்வமே போராதே *கர்மணைவஹிஸம்ஸித்திமாஸ்த்திதா ஜநகாதய:* என்றன்றோ குடியிருப்பது? ஆனால் இதுக்குத் தக்க ஆசாரமுண்டாக வேணுமே அவனுக்கென்ன; ஆனால் அவ்வூரிலுள்ளாருடைய ஆசாரமிருக்கிறபடியைக் கேட்க லாகாதோவென்கிறாள்.

[மடவரல்] மடவந்தபடியை; இவள் எனக்கு பவ்யையானபடியை; பற்றிற்று விடாத படியை யென்னுமாம் [அன்னைமீர்கட்கு] என்கையிலே இவளைக் காட்டித்தந்திருக்கிற உங்க ளுக்கு. [என்சொல்லிச் சொல்லுகேன்] இவள் என்வழி வாராநின்றாளென்னவோ? இவள் எனக்கு பவ்யையென்னவோ? [மல்லை இத்யாதி] நிரவதிகமான ஸம்பத்தையுடையராய், ஸம்ஸ்க்ருதத்துக்கும் வேதத்துக்கும் வ்யாஸபதம் செலுத்தவல்லராயிருந்துள்ள ப்ராஹ்மண ருடைய யாகங்களில் நெய்யாலே ஹோமம்பண்ணின அக்நியிலுண்டான செறிந்தபுகையானது போய். [திடவிசும்பி லமரர்நாட்டை மறைக்கும்] வ்யவஸ்த்திதஸ்வபாவமான ஆகாசத்தில் தேவலோகத்தை மறைக்கும். ஸ்வர்க்கத்திலுள்ள வைமாநிகரை அப்ஸரஸ்ஸுக்கள் முகங் கண்டு அநுபவிக்கவொட்டாதே மறைக்கும். போகத்துக்கு ஏகாந்தமாகத் திரையிடாநின்ற தென்னுமாம். [தண்திருப்புலியூர்] *ஸங்கரஸ்யச கர்த்தா ஸ்யா முபஹந்யாமிமா: ப்ரஜா:* என்றிறே அவன் படியும். [படவரவு இத்யாதி] ஸ்வஸ்பர்சத்தாலே விகஸிதபணனான திருவநந் தாழ்வானைப் படுக்கையாகவுடையவனுடைய திருநாமமல்லது வாய்புலற்றுகிறிலள். நான் அருகேயிருக்க, ஸம்ச்லேஷதசையில் படுக்கையழகையே சொல்லி வாய்புலற்றுகின்றாள் [இவள்] என்னையொழிய வேறொன்றை ப்ரவர்த்திக்க அறியாத இவள்.

**பரவாளிவள்நின்றிராப்பகல் பனிநீர்நிறக்கண்ணபிரான்***
**விரவாரிசைமறைவேதியரொலி வேலையினின்றொலிப்ப***
**கரவார்தடந்தொறும்தாமரைக்கயம் தீவிகைநின்றலரும்***
**புரவார்கழனிகள்சூழ் திருப்புலியூர்ப்புகழன்றிமற்றே. (9)**

ஒ.—ஒன்பதாம்பாட்டில், ஸாமவேத ப்ரப்ருத்யசேஷ வேதார்த்த தத்த்வஜ்ஞாநத்தையு முடையவனை யிருக்கும்படியை எப்போதும் பரவாநின்றாளென்கிறாள். [பனிநீர் நிறக்கண்ணபிரான்] - குளிர்ந்த நீர்போலேயிருக்கிற நிறத்தையும் அந்நிறம்போலே ச்ரமஹரமான ஸ்வபாவத்தை யுமுடையவனான க்ருஷ்ணனுடைய. [விரைவாரிசையென்று தொடங்கி] - நிரதிசய போக்யமான த்வநியை யுடைய ஸாமவேதிகளுடைய அத்யயநகோஷமானது கடல்போலே கோஷியாநிற்க. 'விரவார்' என்று பாடமானபோது விரவியெழுகிற நாலுவேதங்களினுடைய த்வநியும் வேதார்த்தத்தை மீமாம்ஸிக்கிறவர் களுடைய த்வநியுமென்றுபொருள். [கரவார் தடமென்று மேலுக்கு] - பொய்கைகள்தோறும் தாமரை

நிலைவிளக்கெரியுமா போலே மலராநிற்பதுஞ்செய்து தலைத்தரமான கழனிகளையும் உடைத்தாயிருக்கிற திருப்புலியூரில் புகழ் அன்றி மற்றொன்று. கயம் - பெருமை; ஆவது - திரள். கரவு - முதலை.

இ.—ஒன்பதாம்பாட்டில், "நிஷ்ட்டிதம் ஸர்வசாஸ்த்ரேஷு ஸர்வவேதேஷு நிஷ்ட்டிதம்" என்கிற இக்குலத்திலே பிறந்தவளுக்கு ஸத்ருசமான வேதார்த்ததத்த்வஜ்ஞாநமுண்டாக வேண்டாவோவென்ன, ஸாமவேத ப்ரப்ருத்யசேஷ வேதார்த்ததத்த்வஜ்ஞானத்தையைப் பரவாநின்றாள் என்கிறாள். [பரவாளிவள் நின்றிராப்பகல்] - இவள் அடைவுகெடப் பேசாநின்றாள்; இராப்பகல் பேசாநின்றாள். இதுக்கு வேறு ப்ரமாணம் தேடவேணுமோ? இவளுக்தியேயன்றோ ப்ரமாணம். [பனிநீர் நிறக்கண்ணபிரான்] - குளிர்ந்த நீர்போலேயிருக்கிற திருநிறத்தையும் அப்படியே குளிர்ந்த சீலத்தையு முடையவன். [விரவாரிசை மறை] விரவி-எங்குமொக்கப்பரம்பி, ஆர்ந்து - மிக்கிருந்துள்ள, ஸ்வரத்தையுடைத்தான வேத மென்னுதல். "விரை" என்று போக்யதையாய் வார் என்று அதில் மிகுதியாய் "இசைமறை" என்று ஸாமவேத மென்னுதல். வேதியரொலி - வேதகோஷமும் வேதார்த்தவிசாரம் பண்ணுவாருடைய கோஷமும். வேலையில் நின்றொலிப்ப-ஸமுத்ரகோஷத்திற்காட்டில் நின்றுகோஷிக்க. [கரவார் தடந்தோறும்] - முதலை மிக்கிருந்துள்ள தடாகந்தோறும். கரவு - முதலை. தாமரைக்கயம் - தாமரைப்பெருமை, தாமரைத்திரள். "தடவும் கயவும் நளியும் பெருமை" என்னக்கடவதிறே. தீவிகை நின்றலரும் - நிலைவிளக்கெரியுமா போலே அலராநின்றன. [புரவார்கழனிகள்சூழ்] - புரவார்ந்திருக்கையாகிறது - தலைத்தரப்பெருக்காயிருக்கை. [திருப்புலியூர்ப்புகழ்]-வேதகோஷமும் வேதாத்தவிசாரயுக்தர் கோஷமும், அலர்ந்த தாமரைப் பொய்கைகளாலே அலங்க்ருதமான வயலுமான திருப்புலியூர்ப் புகழன்றி மற்று பரவாளிவள் நின்றிராப் பகல்.

ஈ௫.—ஒன்பதாம்பாட்டு. ஆசாரமே போருமோ, ப்ரயோகவ்ருத்தியைப் பார்த்து அநுஷ்டாநத்துக்கு வேண்டுவ தறிந்திருக்கவொண்ணாதே? *நிஷ்ட்டிதம் ஸர்வசாஸ்த்ரேஷு ஸர்வவேதேஷு நிஷ்ட்டிதம்* என்றன்றோ இக்குடியிலுள்ளாருடைய படி. இதுக்குத்தக்க வேதார்த்த தத்த்வஜ்ஞான முண்டாகவேணுமேயென்ன, அதுக்கும் ஒரு குறையில்லை யென்கிறாள்.

[பரவாளிவள்நின்றிராப்பகல்] இவள் அடைவுகெடப் பேசாநின்றாள்; இராப்பகல் பேசாநின்றாள். இதுக்கு வேறு ப்ரமாணம் தேடவேணுமோ? இவளுக்தியேயன்றோ ப்ரமாணம். [பனிநீர்நிறக்கண்ணபிரான்] குளிர்ந்த வடிவையும், அப்படியேயிருக்கிற சீலத்தையு முடைய வன். [விரவாரிசைமறை] விரவி - எங்குமொக்கப் பரம்பி, ஆர்ந்து, மிக்கிருந்துள்ள, ஸ்வரத்தை யுடைத்தான வேதமென்னுதல். அன்றிக்கே, 'விரைவார்' என்று பாடமாகில், விரையென்று - போக்யதையாய், வாரென்று - அதில் மிகுதியாய், இசைமறையென்று - ஸாமவேதமென்னு தல். [வேதியரொலி] வேதகோஷமும், வேதார்த்தவிசாரம்பண்ணுகிறவர்களுடையகோஷமும். [வேலையில்நின்றொலிப்ப] ஸமுத்ரகோஷத்திற்காட்டில் நின்று கோஷிக்க. [கரவார்தடந் தோறும்] முதலை மிக்கிருந்துள்ள பொய்கைதோறும். [தாமரை இத்யாதி] (தாமரைக்கயம்) கயமென்று திரளுக்கும், பெருமைக்கும் பேர். [தீவிகை] விளக்கு. தாமரையினுடைய திரளானது நிலைவிளக்குப்போலே அலர்ந்து நிற்கும். [புரவார்கழனிகள்சூழ்] - (புரவு - ஸாரம், பூஸாரமென்றபடி.) புரவார்ந்திருக்கையாவது - தலைத்தரப்பெருக்காயிருக்கை. பட்டர், "அவ் வூரில் ப்ராஹ்மணர் இறுத்து மாய்கிறார்கள். இவ்வூருக்குச் சிறப்புச் சொல்லிப்போரு கிறாரிறே" என்றருளிச்செய்வர். [திருப்புலியூர்ப்புகழன்றிமற்று பரவாளிவள் நின்றி ராப்பகல்] அவ்வூரிலுள்ளாருடைய வேதகோஷமும், வேதார்த்த விசாரம் பண்ணுகிற ஆரவாரமும், அவ்வூரில் போக்யதையுமேயிறே இவள் அடைவுகெடச் சொல்லாநிற்பது.

அன்றிமற்றோருபாயமென்? இவளந்தண்துழாய்கமழ்தல்*
குன்றமாமணிமாடமாளிகைக் கோலக்குழாங்கள்மல்கி*
தென்திசைத்திலதம்புரை குட்டநாட்டுத்திருப்புலியூர்*
நின்றமாயப்பிரான்திருவருளாம் இவள்நேர்பட்டதே. (10)

ஒ.—பத்தாம்பாட்டில், நாம் பேசுமளவோ அவனுடையபடி? அத்யாச்சர்யமென்று சொல்லி அவனோடே ஸம்ச்லேஷித்தமைக்கு இவர்களும் இசைய வேண்டும் படியான அடையாளஞ் சொல்லுகிறாள். [அன்றி மற்றோருபாயமென் இவளந்தண்துழாய்கமழ்தல்] - வேறுமற்று உபாயம்உண்டோ, இவள் அழகிதாய் குளிர்ந்ததிருத்துழாய் நாறுகைக்கு? [குன்றமாமணிமாடமென்று தொடங்கி] - மலை போலே மஹார்க்கமான ரத்நங்களாலே செய்த அழகிய மாடங்களினுடைய திரளாலே நெருங்கித் தெற்கில்திக்குக்குத் திலகம்போலே யிருக்கிற குட்டநாட்டுத் திருப்புலியூரிலே நின்றருளின ஆச்சர்யபூதனான அவனுடைய ப்ரஸாதத்துக்குப் பாத்ரமானாளாகவேணும்.

இ.—பத்தாம்பாட்டில், அவன்பெருமைக்கு இவள்தான் அவனுக்குத் தரமன்று; அதொழிய உங்களுக்கும் இசையவேண்டும்படியான வ்யக்தமான அடையாளங்களுமுண்டென்கிறாள். [அன்றி இத்யாதி] - வேறுமற்று உபாயமுண்டோ இவள் அழகிதாய்க் குளிர்த்திருக்கிற திருத்துழாய் நாறுகைக்கு? ராஜபுத்ரனை அணையாதார்க்கு மாளிகைச்சாந்து நாறுமோ? என்னுடம்பு திருத்துழாய் நாறுகின்றதோ? ஸ்வாபதேசத்தில், "அந்தண்துழாய் கமழ்தல்" என்கிறது அங்கீகாரஸூசகமாயிருக்கிறது. [குன்றம் இத்யாதி] - மலைபோலேயாய், மஹார்க்கமான ரத்நங்களாலே செய்த மாடமென்ன, மாளிகையென்ன, இவற்றினுடைய தர்சநீயமான திரள்களாலே இடைபுழற நெருங்கி; "க்ருஹைகாடாமவிச்சிந்நாம்" என்னுமாபோலே. [தென்திசை இத்யாதி] - தெற்கில்திக்குக்குத் திலகம்போலேயிருக்கிற குட்டநாட்டுத் திருப்புலியூரிலே நின்றருளின ஆச்சர்யபூதன். "அவனுக்கு இவன் போரான்" என்னும்படி குணாதிகன். "இவளுக்கவன்போரான்" என்றன்றோ நீங்களிருக்கிறது; "அவனுக்கு இவள் போராள்" என்றன்றோ அவ்வூரார்வார்த்தை. [திருவருள்·நேர்பட்டது·ஆம்]-அவன்ப்ரஸாதத்துக்கு ஸத்ருசமான பாத்ரமானாளாகவேணும்; அன்றி, மற்றோருபாயமென், இவளந்தண்துழாய் கமழ்தல்?

ஈடு.—பத்தாம்பாட்டு. நீ சொல்லுகிறவை யெல்லாம் கிடக்க; இவளை அவனுக்குக் கொடுக்க வேண்டும்படி அஸாதாரண லக்ஷணம் ஏதேனு முண்டாகில் சொல்லென்னச் சொல்லுகிறாள்.

[அன்றிமற்றோருபாயமென்-இவளந்தண்துழாய் கமழ்தல்] வேறுமற்று உபாயமுண்டோ இவள் அழகிதாய்க்குளிர்ந்த திருத்துழாய் நாறுகைக்கு? ராஜபுத்ரனை அணையாதார்க்குக் கோயிற்சாந்து நாறுகைக்கு விரகுண்டோ? என்னுடம்பாதல் உங்களுடம்பாதல் திருத்துழாய் நாறுகின்றதோ? ஸ்வாபதேசத்தில், "அந்தண்துழாய்கமழ்தல்" என்கிறவிது அங்கீகாரஸூசகமாயிருக்கிறது. [குன்றம் இத்யாதி] மலைபோலே அதிசால்யமாயிருப்பதாய், பெருவிலையனான ரத்நங்களாலே செய்யப்பட்டிருக்குமுள்ள மாடங்களினுடையவும் மாளிகைகளுடையவும் தர்சநீயமான குழாங்களால் மிக்கு. தெற்கில் திக்குக்குத் திலகம்போலேயிருக்கிற குட்டநாட்டுத் திருப்புலியூரிலே நின்றருளின ஆச்சர்யபூதன்; "அவனுக்கு இவன் போரான்" என்னும்படி குணாதிகன். "இவளுக்கு அவன் போரான்" என்றன்றோ நீங்களிருக்கிறது? "அவனுக்கு இவள் போராள்" என்றன்றோ அவ்வூரிலுள்ளார் வார்த்தை. [திருவருளாமிவள்நேர்பட்டதே] இவள் நேர்பட்டது அவன் திருவருளாம். அவன் திருவருளேயாமென்றாள். இதுவேயோ? இன்னம் அடையாளமுண்டோவென்ன? [அன்றி மற்றோருபாயமென் இவளந்தண்டுழாய்கமழ்தல்].

நேர்பட்டநிறைமூவுலகுக்கும் நாயகன்தன்னடிமை*
நேர்பட்டதொண்டர்தொண்டர்தொண்டர் தொண்டன்சடகோபன்
நேர்பட்டதமிழ்மாலை ஆயிரத்துள்ளிவைபத்தும் [சொல்*
நேர்பட்டாரவர்* நேர்பட்டார் நெடுமாற்கடிமைசெய்யவே. (11)

ஆ.—நிகமத்தில், இப்பத்தையும் கற்றவர்கள், இவ்வாத்மாவுக்கு நிரதிசய புருஷார்த்தமான பகவத்கைங்கர்யத்தைப் பண்ணப்பெறுவர் என்கிறார். [நேர்பட்ட நிறைமூவுலகென்று] - இப்பாட்டுக்கு; எம்பெருமான் இஜ்ஜகத்துக்கு ஸ்வாமியாக நேர்ப்பட்டாப்போலே அடிமைக்கு நேர்படுவதுஞ்செய்து தாஸ்யபர்யவஸானபூமியிலே நின்ற ஆழ்வாருடைய உக்தியான வாய்த்த ஆயிரந் திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழி நேர்பட்டவர்கள் ஸர்வேச்வரனுக்கு அடிமைசெய்ய நேர்பட்டார்,

இ.—நிகமத்தில், இப்பத்தையுங்கற்றவர்கள் ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்தைப் பண்ணப் பெறுவ ரென்கிறார். [நேர்பட்ட நிறை மூவுலகுக்கும் நாயகன்]-குறைவற்ற மூவுலகுக்கும் நேர்பட்ட நாயகன். "த்ரைலோக்யமபி நாதேந யேந ஸ்யாந்நாதவத்தரம், என்று ரக்ஷ்யத்தினளவன்றிக்கே யிருக்கிற ரக்ஷகத்வத் துடிப்பு. இத்தால் - நாயகன்படி சொல்லிற்று. இவர்தம்படி சொல்லுகிறது:—[அடிமைநேர்பட்ட தொண்டர்இத்யாதி] - அவன் சேஷித்வத்துக்கெல்லையானாப்போலே இவர் சேஷத்வத்துக்கெல்லையானபடியும். [சொல் நேர்பட்ட தமிழ்மாலை] - அந்த வாச்யத்துக்குத் தகுதியான உக்திவாய்த்த தமிழ்த் தொடையாயிரத்திலும் இத்திருவாய்மொழி நேர்பட்டவர்கள். [நேர்பட்டார் நெடுமாற்கடிமை செய்யவே] ஸர்வேச்வரனுக் கடிமை செய்ய நேர்பட்டார். இவர்பாசுரத்தைச் சொன்னவர்கள், இவருடைய வ்ருத்தியிலேயன்வயிக்கப் பெறுவரென்கை. ஸர்வேச்வர ஸ்வரூபத்தையும், ஸ்வஸ்வரூபத்தையும், ப்ரதிபாதகமான ப்ரபந்தவைலக்ஷண்யத்தையும், இத்தையப்யஸித்தாருடைய ப்ராப்யவைலக்ஷண்யத்தையும் சொல்லிற்றுயிற்று.

ஈடு.—நிகமத்தில் - இப்பத்தைக் கற்றவர், ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்தைப் பண்ணப் பெறுவரென்கிறார்.

[நேர்பட்ட நிறைமூவுலகுக்கும் நாயகன் தன்னடிமை] குறைவற்ற மூவுலகுக்கும் நேர்பட்ட நாயகன். *த்ரைலோக்யமபி நாதேந யேந ஸ்யாந்நாதவத்தரம்* என்று ரக்ஷ்யவர்க்கத்தளவன்றிக்கே யிருக்கிற ரக்ஷகத்வத் துடிப்பு. இத்தால் நாயகன்படி சொல்லிற்று. *அநுரூபஸ் ஸவை நாத:* என்னுமாபோலே. [அடிமைநேர்பட்டதொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன்] இவர் தம்படி சொல்லுகிறது. அவன் சேஷித்வத்துக்கு எல்லையானாப்போலே, இவர் சேஷத்வத்துக் கெல்லையானபடி. [சொல் நேர்பட்டதமிழ்மாலை] அந்த வாச்யத்துக்குத் தகுதியான உக்திவாய்த்த தமிழ்த்தொடையாயிரத்திலும் இத்திருவாய்மொழி நேர்பட்டவர்கள். [நெடுமாற்கடிமை செய்ய நேர்பட்டார்] இப்பாசுரத்தைச் சொன்னவர்கள், இவருடையவ்ருத்தியிலே அந்வயிக்கப்பெறுவரென்கை. நேர்படுகை - சொல்லப்படுகை; சொல்லப்பட்டாரென்றபடி. ஆக, இப்பாட்டால் - ஸர்வேச்வரஸ்வரூபத்தையும், ஸ்வஸ்வரூபத்தையும், ப்ரதிபாதகமான ப்ரபந்தவைலக்ஷண்யத்தையும், இத்தை யப்யஸித்தாருடைய ப்ராப்யவைலக்ஷண்யத்தையும் சொல்லிற்றாயிற்று.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## பத்தாந்திருவாய்மொழி—நெடுமாற்கடிமை : ப்ரவேசம்

ஒ.—பத்தாம் திருவாய்மொழியில், எம்பெருமான் தம்மை அநந்யார்ஹமாம்படி அடிமை கொண்டபடியை அநுஸந்தித்து மிகவும் ப்ரீதரான ஆழ்வார், அந்த ப்ரீதிப்ரகர்ஷத்தாலே அவ்வளவில் பர்யவஸியாதே, அவனுடைய ஸௌந்தர்யசீலாதிகளிலே ஈடுபட்டிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுடைய திருவடிகளில் சேஷத்வத்தளவும் சென்று ஸ்ரீசத்ருக்நாழ்வானைப்போலே "அவர்களுக்கு சேஷமாகையே நிரதிசய புருஷார்த்தம்" என்றத்யவஸித்து, 'ஐச்வர்யாதியாய் ஸர்வேச்வரத்வ பர்யந்தமான ஸகல புருஷார்த்தங்களும் தனித்தனியும் திரளவும் இப்பாகவத சேஷத்வ புருஷார்த்தத்தோடொவ்வாது; இப்புருஷார்த்தமே யென்றும்நேர்படவேணும்' என்கிறார். பயிலுஞ்சுடரொளியில் "இவ்வாத்மாவுக்கு நாதர் ஸ்ரீவைஷ்ணவர்கள்" என்றது; "இத்திருவாய்மொழியில் நிரதிசயபுருஷார்த்தபூதர் அவர்கள்" என்கிறது.

**இ.—பத்தாம் திருவாய்மொழியில், கீழ் கண்கள்சிவந்து, கருமாணிக்கமலை இரண்டிலுமாக அவனுக்குத் தம்மை அநந்யார்ஹசேஷமாக அநுஸந்தித்து மிகவும் ப்ரீதரானவர், அந்தப்ரீதிப்ரகர்ஷத்தாலே அவ்வளவில் பர்யவஸியாதே, அவனுடைய ஸௌந்தர்யசீலாதிகளிலே ஈடுபட்டிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுடைய திருவடிகளில் சேஷத்வத்தளவும் சென்று, "அவர்களுக்கு சேஷமாகையே நிரதிசய புருஷார்த்தம்" என்று அத்யவஸித்து, "ஐச்வர்யம், ஆத்மப்ராப்தி, பகவத்ப்ராப்தி, ஸர்வநியந்தாவாய் ஆநந்த விப்ரஹனுமிருக்குமிருப்பு என்று சொல்லுகிற ஸகல புருஷார்த்தங்களும் தனித்தனியும், திரளவும், இந்த பாகவதசேஷத்வமாகிற புருஷார்த்தத்தோடொவ்வாது; இப்புருஷார்த்தம் என்றும் நேர்படவேணும்" என்று ப்ரார்த்தித்துத் தலைக்கட்டுகிறார். இதுவும் நமச்சப் தார்த்தத்திலே யொன்றுயிருக்கிறது. "நின்திருவெட்டெழுத்துங்கற்று நான் உற்றதும் உன்னடியார்க்கடிமை" என்றதிறே. இன்னம் ஈச்வர சேஷத்வம் நிலைநின்றதாவது :—ததீயர்க்கு க்ரயவிக்ரயார்ஹமானாலாயிற்று. ஒருவனுக்கு ஒன்றுண்டானால் - புத்ரபௌத்ராதிகளுக்கு இஷ்டவிநியோஹார்ஹமானாலிறே அவனுக்கு ஸ்வமமாயிற்றுவது. இது தான் பயிலுஞ்சுடரொளியிலே சொல்லிற்று அன்றோ? என்னில்; அதில் இவ்வாத்மாவுக்கு நாதர் ஸ்ரீவைஷ்ணவர்கள் என்றது; "இதில் நிரதிசய போக்ய பூதர் அவர்கள்" என்கிறது; 'ஸ மஹாத்மா ஸுதுர்லப:' "பேராளன்பேரோதும் பெரியோர்," "தண்சேறையெம்பெருமான்தாள் தொழுவார் காண்மினென்தலைமேலாரே" என்றிறே அளவுடையார் வார்த்தை. ராமாயண புருஷர்களில் ஸ்ரீசத்ருக்நாழ்வான் இதுக்கு நிதர்சநம்: 'கச்சதா' இத்யாதி.**

ஈடு.—கீழிரண்டு திருவாய்மொழியாலுமாக ஆத்மாவினுடைய அநந்யார்ஹசேஷத்வம் சொல்லிற்றாய், அது "பிறர்க்கு முரித்தல்ல, தனக்குமுரித்தல்ல" என்றாயிற்றுச் சொல்லிற்று. ப்ரணவத்தில் மத்யமபதத்தாலும், நமஸ்ஸாலும் சொன்ன அர்த்தமாயிற்றுச் சொல்லிநின்றது. அநந்யார்ஹசேஷத்வத்துக்கு எல்லை, ததீயசேஷத்வபர்யந்தமாகையிறே. ததீயர்க்கு க்ரயவிக்ரயார்ஹமானவன்றிறே தச்சேஷத்வம் நிலைநின்றதாவது. "எந்தம்மை விற்கவும் பெறுவார்கள்" என்றிறே இருப்பது. அம்முனியாழ்வான் போசனராஜ்யத்தினின்றும் வந்தநாளிலே, பட்டர் கண்டருளி, "நீ ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் போர அடிமைசெய்து போந்தாய் என்று கேட்டோம்" உன் ப்ரக்ருதிக்குச்சேர நெடுமாற்கடிமையைக்கேள்" என்று அருளிச் செய்தாராம். "ஈச்வரசேஷம்" என்று அறிந்தவன்று ப்ரமித்து மீளவுமாம்; ததீயசேஷத்வ பர்யந்தமாக உணர்ந்தால் மீளவேண்டாவிறே. *தத்பக்திநிக்நமநஸாம் க்ரயவிக்ரயார்ஹ:* என்னக் கடவதிறே. ஐச்வர்யம் புருஷார்த்தம் என்றிருப்பார், ஆத்மலாபம் புருஷார்த்தம் என்றிருப்பார், பகவச்சேஷத்வம் புருஷார்த்தம் என்றிருப்பார், ஈச்வரனாய் *ஆநந்தமய:* என்றிருக்குமிருப்பு புருஷார்த்தம் என்றிருப்பாராயிறேயிருக்கிறது. இப்படிப்பட்ட புருஷார்த்தங்கள், தனித்தனியும் திரளவும், நான்பற்றின பாகவதசேஷத்வமாகிற புருஷார்த்தத்தோடொவ்வாது என்று எடுத்துக்கழிக்கவும் போராது. இப்படியிருக்கிற இதுவே காலதத்த்வமுள்ளதனையும்

எனக்கும் என்னோடு ஸம்பந்தமுடையார்க்கும் வாய்க்கவேணும் என்று ப்ரார்த்தித்துத் தலைக் கட்டுகிறார். பயிலும்சுடரொளியிற்காட்டில் இத்திருவாய்மொழிக்கு வாசியென்? என்னில், பாகவதர்கள் சேஷிகளென்றதங்கு; பாகவதர்கள் போக்யரென்கிறதிங்கு. *கச்சதா மாதுலகுலம்* - ஸ்ரீசத்ருக்நாழ்வானுக்காதல், இவ்வாழ்வார்க்காதலிறே இவ்வர்த்தங்களில் ருசியுள்ளது. *நித்யசத்ருக்ந:* - "பெருமான் போக்யர்" என்று அவர்பக்கல் கண்வையான் என்றிறே.

**நெடுமாற்கடிமைசெய்வேன்போல் அவனைக்கருதவஞ்சித்து***
**தடுமாற்றற்றதீக்கதிகள் முற்றுந்தவிர்ந்தசதிர்நினைந்தால்***
**கொடுமாவினையேனவனடியாரடியே கூடுமிதுவல்லால்***
**விடுமாறென்பதென்? அந்தோ! வியன்மூவுலகுபெறினுமே. (1)**

ஒ.—முதற்பாட்டில், விஸ்மயநீயமான த்ரைலோக்யத்தையாளுமதிற்காட்டிலும், பாகவத சேஷத்வமே எனக்கு நிரதிசயபோக்ய மென்கிறார். [நெடுமாற்கடிமை செய்வேன்போ லவனைக்கருத] - ஆச்ரிதரைத் தன்திருவடிகளிலே விஷயீகரித்தருளும் அளவன்றிக்கே, பாகவதசேஷத்வ பர்யந்த மாக்கும் பெரும்பித்தனானவனுக்கு, அடிமைசெய்யவென்று அவனைக் குறித்து மநோரதித்த மாத்ரத் திலே. [வஞ்சித்துத் தடுமாற்றற்ற தீக்கதிகள்முற்றுந்தவிர்ந்த] - பாதகநில்லாமையாலே பதற்ற மற்றுநின்று நலிகிற புண்யபாபரூப கர்மங்கள் அவைதனக்கடியான அவித்யாகர்ம வாஸநாருசி களோடுங்கூட அடையப்போயிற்று; தெரியாமே என்னைவிட்டுப்போன. [சதிர்நினைந்தால்] - உறுவன பார்க்கில். [கொடுமாவினையேன்] - ப்ரீதிப்ரகர்ஷத்தாலே மகாபாவியானேனென்கிறார். "முதலிலே பாகவதசேஷத்வத்திலே தலைவைக்கப் பெற்றிலேனென்று மகாபாவியே னென்கிறார்" என்றுஞ் சொல்லுவர். பாகவதசேஷத்வபுருஷார்த்தம் ஐச்வர்யத்தோ டொவ்வாது" என்று பேசிக் கழிக்கவேண்டு வதேயென்னும் வெறுப்பாலே 'அந்தோ' என்கிறார்.

இ.—முதற்பாட்டில், விஸ்மயநீயமான த்ரைலோக்யத்தை யாளப்பெறுமதிற் காட்டிலும், பாகவத சேஷத்வமே எனக்கு நிரதிசயபோக்யமென்கிறார். [நெடுமாற்கு] - மாலென்று - பெரியோன். நெடுமை - அதின்மிகுதி ஸர்வசேஷியென்றபடி. "தமீச்வராணும் பரமம்மஹேச்வரம்". அவனுடைய சேஷித் வத்தில் எல்லையைச்சொல்லுகிறார்; தாம் சேஷத்வத்தில் எல்லையிலேநிற்கப் பார்க்கிறவராகையாலே. அதவா, மாலென்று - வ்யாமுக்தன். நெடுமை - அதின்மிகுதியாய் அதிவ்யாமுக்தன். தன்திருவடி களைப் பற்றினாரைத் தன்னளவன்றிக்கே தன்னுடையாரளவும் செல்ல நிறுத்தும்படியான வ்யாமோஹத்தை யுடையவனென்கை; "அடியார்க்கென்னையாட்படுத்த விமலன்". [அடிமைசெய்வேன்போல் அவனைக் கருத] - ஸர்வசேஷியானவனைக் குறித்து மனோரதித்த மாத்ரத்திலேபோல்; மித்ரபாவமேயுள்ளது ஆராய்ந்தால் என்கை. [தடுமாற்றற்ற தீக்கதிகள்] - நிவாரகரில்லாமையாலே கூச்சமற்றுநின்று படவடிக்கிற அவித்யாதிகளாகிற விரோதிவர்க்கமடங்க. இடையிலே ஒருஸத்கர்மமும் பண்ணிலிறே அவையிவற்றுக்குக் கூசவேண்டுவது. [முற்றுந்தவிர்ந்த] - ஒருக்காலே நிச்சேஷமாகப் போயிற்றின. நான் போக்கிக்கொள்ளுமன்றிறே க்ரமத்திலே போவது. "ஸர்வே பாப்மாந: ப்ரதூயந்தே" "ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்றிறே, அவன்போக்கும்போதிருப்பது. தவிர்ந்தப்ரகாரமென்? என்னில்,— [வஞ்சித்து - தவிர்ந்த] - மத்யராத்ரத்திலே வஞ்சித்துப் போவாரைப்போலே, போனமை தெரியாதபடி போயிற்றின; "சும்மெனாதே கைவிட்டோடித் தூறுகள் பாய்ந்தன" என்கிறபடியே. 'தடுமாற்றற்ற தீக்கதிகள் முற்றும் வஞ்சித்து - தவிர்ந்த' என்னுதல். 'அடிமைசெய்வேன் போல் அவனை வஞ்சித்து - கருத - முற்றுந்தவிர்ந்த' - என்னுதல். [சதிர்நினைந்தால்] - உறுவனபார்க்கில், ததீயரையன்றோ பற்ற வடுப்பது. [கொடுமாவினையேன்] - ஹர்ஷம் மிக்கவளவிலே இது சொல்லிற்றென்னென்னில்; பாட்டுக் கேட்பார் "பாவியேன்" என்னுமாபோலே யென்னுதல்; முதலிலே சரமாவதியான பாகவதசேஷத்வத்திலே தலைவைக்கப் பெற்றிலேனென்று வெறுக்கிறாராதல்; இதுகிடக்க, ப்ரதமாவதியிலேநின்று துவங்கினே னென்கிறார். [அவனடியாரடியே] - தன்திருவடிகளிலேதலைசாய்த்தால் தான்சேஷியாயிருக்கையன்றிக்கே,

அவர்களை யொழியச்செல்லாத வ்யாமுக்தனுடைய திருவடிகளோபாதியானுர்திருவடிகளையன்றோ பற்ற, வடுப்பது? அவன் ஆச்ரித வ்யாமுக்தனானால் அவனுக்கு ப்ரியவிஷயத்தையன்றோ பற்றவடுப்பது? அவதார ணத்தலே - அங்கு ஸாம்யாபந்நரா யிருக்குமவரல்லர். அவன் சேஷித்வத்திலெல்லையிலே நிற்குமாபோலே, இவரும் சேஷத்வத்திலெல்லையிலே நிற்கிறார். [விடுமாறென்பதென்] - ஐச்வர்யாதிகளைப்பற்றினால்' அவற்றைவிட்டு பகவத்விஷயத்தைப்பற்றலாம்; அதிலேயின்றால் சரமாவதியான இதிலேபுகுரலாம்; இதுவேயின்றால் மேல் கந்தவ்யபூமியில்லை யென்கை. [அந்தோ] - பாகவதசேஷத்வ புருஷார்த்தத்தோ டொவ்வாது ஐச்வர்யம் என்று பேசிக் கழிக்கவேண்டுவதே என்கிறார். [வியன் மூவுலகு பெறினுமே] - விஸ்மயநீயமான த்ரைலோக்யத்தைப்பெறிலும். காடுமோடையும் திருத்தி ஆச்சர்யமாகப்பண்ணி, எனக்குத்தந்தாலும் - விடுமாறென்பதென்? [பெறினும்] - பெறுந்தனையும் இப்படிச்சொல்லிப் பெற்றவாறே அதிலே தோன்மாறிச் சொன்ன வார்த்தையன்று; பெறிலும் இதுவே வார்த்தை. ஐச்வர்யத்துக்கு லோகபரிக்ரஹமுண்டாகையாலே, அத்யந்தவிஸத்ருசமாயிருக்கச் செய்தேயும், நான்பற்றின பாகவத சேஷத்வத்தோடு ஒவ்வா தென்கிறார்.

ஈடு.—முதற்பாட்டு. நாட்டார் விரும்புகிற ஐச்வர்யபுருஷார்த்தமும் நான் பற்றின புருஷார்த்தத்தோடு ஒவ்வாதென்று எடுத்துக்கழிக்கவும் போராதென்கிறார்.

[நெடுமாற்கு] நெடுமாலுக் கென்றபடி. மாலென்று - பெரியோனென்றபடி. நெடுமை யால் நினைக்கிறது - அதில் பெருமையை; அறப்பெரியோனென்றபடி. அவன்சேஷித்வத்தில் எல்லையைப் பிடிக்கிறார், தாம் சேஷத்வத்தில் எல்லையைக் கணிசிக்கிறவராகையாலே. அன்றிக்கே, மாலென்று - வ்யாமோஹமாய், நெடுமையால் - மிக்கவ்யாமோஹத்தையுடையவ னென்னுதல். தன்னளவன்றியே தன்னுடையாரளவிலே நிறுத்தும்படிகாணும் வ்யாமோஹம்; "அடியார்க்கென்னை யாட்படுத்தவிமலன்". [அடிமைசெய்வேன் போலவனைக்கருத] அவனுக்கு அடிமை செய்வாரைப்போலே அவனைநினைக்க, மித்ரபாவமேயாய், ஆராய்ந்தால் அதுதானும் போட்கன். [தடுமாற்றற்றதீக்கதிகள் முற்றுந்தவிர்ந்த] ஒரு ஸத்கர்மத்தை யநுஷ்டித்து, அது நின்று தடுக்குமதில்லாமையாலே தடுமாற்றமற்று வர்த்திக்கிற அவித்யாதிகளடங்கத் தவிர்ந் தன. தவிர்ந்தபடிதானென்னில், - வஞ்சித்துத்தவிர்ந்தன. பகலெல்லாம் ஒக்கவர்த்திக்கக் கடவோமென்று சொல்லிவைத்து, ராத்ரியிலே ஒருகலத்திலேயுண்டு வைத்து, ஒக்கக்கிடந்து விளக்கை யெரியவைத்துப் போனதறியாமே வஞ்சித்துப் போவாரைப்போலே. 'அடிமை செய்வேன்போலவனை - வஞ்சித்து கருத' என்னவுமாம். [முற்றுந்தவிர்ந்த] நான் போக்கிக் கொள்ளு மன்றிறே க்ரமத்தாலே போகவேண்டுவது. *ஸர்வே பாப்மாந: ப்ரதூயந்தே* *ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி* என்றிறே அவன் போக்கும்போது இருப்பது [சதிர்நினைந் தால்] அவன்திருவடிகளிலே குனித்தமாத்ரத்திலே துஷ்கர்மங்களடங்கலும் போனபடியை யநுஸந்தித்தால், புருஷார்த்தத்துக்கு எல்லையானுரையன்றோ பற்றவடுப்பது? உறுவதுபார்க் கில் ததீயரையன்றோ பற்றவடுப்பது? [கொடுமாவினையேன்] ப்ரீதி தலைமண்டையிட்டுச் சொல்லுகிறார். பாட்டுக்கேட்பார் பாட்டுவருத்தினவாறே "பாவியேன்" என்னுமாபோலே. அன்றிக்கே, ப்ரதமாவதியிலே சரமாவதியைப் பற்றப் பெற்றிலே னென்கிறாராகவுமாம். [அவனடியாரடியே கூடும் இதுவல்லால்] தன்திருவடிகளைப் பற்றினார்திறத்திலே அவன் மிக்க வ்யாமோஹத்தைப் பண்ணுவானானால், அவன் விரும்பினாரையன்றோ நமக்கும் விரும்ப வடுப்பது? அவன் ஆச்ரிதவ்யாமுக்தனானால் அவனுக்கு ப்ரிய விஷயத்தையன்றோ பற்ற வடுப்பது? அவதாரணத்தால் - அங்கு ஸாம்யாபந்நராயிருக்குமவரல்லர், அவன் சேஷித்வத்தி லெல்லையிலே நிற்குமாபோலே, சேஷத்வத்தின் எல்லையிலே நிற்கிறார். [அடியேகூடும்] அவர்களோ டொப்பூணுண்ணை விருக்குமவரல்லர்; அவர்கள்காலைப் பற்றுவராயிற்று. [விடுமாறென்பதென்] புறம்புண்டான விஷயத்திலே விடுவது பற்றுவதானத்தை இவ்விஷயத் திலும் செய்யவோ? [அந்தோ] நான் பற்றின புருஷார்த்தத்துக்கு நாலு மூன்றுபடி கீழே நிற்கிற ஐச்வர்யம் இத்தோடு ஒவ்வாதென்ன வேண்டுவதே! என்று, அந்தோ! என்கிறார். [வியன்மூவுலகுபெறினும்] காடும் மலையுமான அமசத்தைத்திருத்தி, அநுபவயோக்யமாம்படி

பண்ணி, த்ரைலோக்யத்தையும் எனக்குக் கையடைப்பாக்கினாலும் விடுமாறென்பதென்
னங்கோ! ஐச்வர்யத்துக்கு லோகபரிக்ரஹமுண்டாகையிறே, அத்யந்த விஸத்ருசமாயிருக்கச்
செய்தேயும், "இது நான் பற்றின பாகவதசேஷத்வத்தோடொவ்வாது என்னவேண்டுகிறது.

**வியன்மூவுலகுபெறினும் போய்த்தானே தானேயானாலும்***
**புயல்மேகம்போல்திருமேனியம்மான் புனைபூங்கழலடிக்கீழ்***
**சயமேயடிமைதலைநின்றார் திருத்தாள்வணங்கி* இம்மையே**
**பயனேயின்பம்யான்பெற்றது உறுமோபாவியேனுக்கே.** **(2)**

ஒ.—இரண்டாம்பாட்டில், ஐச்வர்ய கைவல்யங்களிரண்டுங் கூடிலும் நான் பெற்ற பாகவத சேஷத்வமாகிற புருஷார்த்தத்தோடு ஒவ்வாதென்கிறார். [வியன்மூவுலகென்று தொடங்கி] - சிறப்புடைய ஐச்வர்ய புருஷார்த்தம் பெறிலும், ஸம்ஸாரத்தில் தொற்றறவற்று கேவலாத்மாநுபவம் பண்ணப்பெற் றாலும், வர்ஷுகமான மேகம்போலேயிருக்கிற வடிவையுடைய ஸர்வேச்வரனுடைய நிரதிசயபோக்ய மான திருவடிக்கிழ் சயமேயடிமை தலைநின்றார். [திருத்தாள் வணங்கி] - அடிமைதானே ப்ரயோஜந மாக எல்லா அடிமையும் செய்யுமவர்களுடைய திருவடிகளை வணங்கி. அவனுடைய ஸௌந்தர்யஜயத் தாலே தோற்று எல்லா அடிமைகளையும் செய்யுமவர்கள் திருவடிகளை வணங்கியென்றுமாம். [இம்மை யென்று தொடங்கி] - இஹலோகத்திலே நான்பெற்ற புருஷார்த்தரூபமான ஸுகத்தை ஒக்குமோ? எனக்கு இவை ஒவ்வாதென்று சொல்லவேண்டிற்றென்னும் கழிப்பாலே பாவியேனென்கிறார்.

இ.—இரண்டாம்பாட்டில், ஐச்வர்ய கைவல்யங்களிரண்டும் கூடினாலும் பாகவதசேஷத்வத்தோ டொவ்வா தென்கிறார். [வியன் மூவுலகுபெறினும்] - சிறப்புடைத்தான ஐச்வர்யபுருஷார்த்தத்தைப் பெறிலும், [போய்த் தானேதானேயானாலும்] - ஸம்ஸார ஸம்பந்தமற்றுப்போய்க் கேவலாத்மாநுபவம் பண்ணப் பெற்றாலும். தானேதானே யென்கிற வீப்ஸையால் - பார்யாபுத்ராதிகளோடு களிக்கும் அத்தை விட்டு, பரமபதத்திலேபோய், 'அஹமந்நமஹமந்நமஹமந்நம்' என்று களிக்குமத்தையும்விட்டுக் கேவலம் தானேயாகை. [புயலித்யாதி] - வர்ஷுகவலாஹகம் போலேயிருக்கிற வடிவையுடையனாய், அவ் வடிவைக் காட்டி யிருந்தேகுடியாகத் தனக்காக்கிக்கொள்ளும் அவன். நிரதிசயபோக்யமான வடிவை யும், விரூபனானாலும் விடவொண்ணாத ஸம்பந்தத்தையும் உடையவனென்றுமாம். [புனைபூங்கழலடிக்கீழ்]- புனையப்பட்ட பூவையும் வீரக்கழலையுமுடைய திருவடிகளின்கீழே. [சயமேயடிமை தலைநின்றார்]-ஸ்வயம் ப்ரயோஜநமாக எல்லாவடிமைகளும் செய்யுமவர்களென்னுதல், அவனுடைய ஸௌந்தர்யஜயத்தாலே தோற்று எல்லாவடிமைகளும் செய்யுமவர்கள் என்னுதல். [சயம்] - ஸ்வயமென்னுதல், ஜயமென்னுதல். [திருத்தாள் வணங்கி] - ஐச்வர்யாநுபவத்திலும் ஆத்மாநுபவஸுகத்திலும், அவன் விக்ரஹத்திற்குத் தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுடைய தேஹத்தில் ஏகதேசத்தைப்பற்ற அமையுமென்கிறார். [இம்மையே பயனேயின்பம்] - ஐஹிகத்திலே நான்பெற்ற ப்ரயோஜநரூபமான ஸுகத்தையொக்குமோ? [பாவியேனுக்கு]-நிலைநின்ற புருஷார்த்தத்தின் எல்லைக்கும் அபுருஷார்த்தத்துக்கும் வாசி சொல்ல வேண்டும் படியான பாபத்தைப் பண்ணினேன். பகவத்விஷயமல்லாமையாலே ஆத்மப்ராப்தி அபுருஷார்த்தம்; ஐச்வர்யம்போலே அஸ்த்திரமல்லாமையாலே நிலைநின்ற புருஷார்த்தமென்கை.

ஈடு.—இரண்டாம்பாட்டு. கீழ்ச்சொன்ன ஐச்வர்யத்தோடே ஆத்மாநுபவத்தைச் சேர்த்துத் தந்தாலும் பாகவதசேஷத்வமாகிற புருஷார்த்தத்தோடு ஒவ்வாதென்கிறார்.

[வியன் மூவுலகுபெறினும்] விஸ்மயநீயமான த்ரைலோக்யைச்வர்யத்தையும் எனக் கொருவனுக்கே யாக்கினாலும். [போய்த்தானே தானேயானாலும்] ஸம்ஸாரபந்தமற்றுப்போய்க் கேவலாத்மாநுபவம்பண்ணப் பெற்றாலும், தானே தானேயென்கிற வீப்ஸையாலே ஸம்ஸாரத் திலே புத்ரபௌத்ராதிகளும் தானுமாய் ஜீவிக்குமத்தையுந்தவிர்ந்து, பரமபதத்தே போய் *அஹமந்நமஹமந்நமஹமந்நம்* என்று களிக்குமத்தையும்விட்டு, கேவலம் தானே யாகை. [புயல்

